

எங்கெங்கிருந்தெல்லாமோ அவை வந்தன, குழந்தைக்குப் பரிசுகளை ஏந்தி. 'என்னுடைய பலத்தை உனக்குக் கொடுக்கிறேன்' என்றது யானை. 'என்னுடைய சுறுசுறுப்பைத் தருகிறேன்' என்றது மான். 'வலுவான என் பற்கள்' என்று முன்வந்தது முயல். 'கூர்மையான பார்வை' என்றது மிஸ்டர் மியாவ். 'உறுதியான எலும்புகள்' என்று கர்ஜித்தது சிங்கம். 'நோய்களை எதிர்க்கும் சக்தி'யைத் தர முயன்றது கரடி.

'இந்த அதிசய அமுல் டின்னிலுள்ள ஆசிகள் அனைத்தையும் வழங்குகிறேன்' என்றது அறிவு முதிர்ந்த ஒரு குரல்.




**அமுல்** பால் உணவு குழந்தைகளுக்குத் தேவையான வைட்டமின்கள் நிறைந்தது.

இந்தியாவின் ஏகபோக விநியோகஸ்தர்கள்: VOLTAS வோல்டாஸ் லிமிடெட்.

ISI

ASP/AMF/51-TAM

சென்னை : வெலிங்டன், பிராட்வே, ராக்ஸி, ராம்

மற்றும் தென்னாடெங்கும்

ஏவிஎம் புரொடக்ஷன்ஸ்

**தீபாவளி வெளியீடு**

# மேஜர் சந்திரகாந்த்

கதை-வசனம்-டைரக்ஷன்
**K. பாலசந்தர்** B.Sc.,

உள்ளத்தால் உயர்ந்த உத்தமரின்
உன்னதமான கதை...




Kleertone
நேர்த்திக்கும் சிக்கனத்திற்கும் கிளியர்டோன்
இஸ்திரிப் பெட்டிகள்:
''எலகெண்ட்'' இஸ்திரிப் பெட்டி.
''இம்பீரியல்'' ஆட்டொமேடிக் இஸ்திரிப் பெட்டிகள்.
கெட்டில்கள்.
சூடெதிர்க்கும் கைப் பிடியும், குமிழ் மூடியும், பாதமும் பொருந்தியது ''இம்பீரியல்'' கெட்டில்.
சாஸ்--பேன் கெட்டிலும் கிடைக்கிறது.
டோஸ்ட்டர்:
முறுகலான பொன்னிற டோஸ்ட்டுகள் தயாரிக்க.
ரேடியண்ட் ஹாட் பிளேட்:
ஒரு தொல்லையில்லை, பரபரப்பு இல்லை— உங்கள் சமையல் வேலையே இலகுவாகிவிடும்.
மடக்கக்கூடிய எஃகு பர்னிச்சர்:
கலையும் சிக்கனமும் பொருந்தியவை.
சோபிக்கும் வர்ணங்களிலே நாகரீக வடிவழகு வாய்ந்தவை.
கிளியர்டோன் தயாரிப்புகள் என்றாலே உறுதியான பாதுகாப்பும் நிலையான மதிப்பும் உங்களுக்குக் கிடைப்பது நிச்சயம். செப்பம் செய்வதிலே யாதொரு தொல்லையும் இராது. ஏனெனில், எங்கெங்கும் இவ் வசதிகள் கிடைக்கின்றன. தவிர இத் தயாரிப்புகள் எல்லாவற்றுக்கும் 1 வருட கால உத்தரவாதம் தரப்படுகின்றன.
நல்வாழ்வுக்கே கிளியர்டோன் தயாரிப்புகள்
முக்கியமான எல்லா எலக்ட்ரிகல் வியாபாரிகளிடமும் கிடைக்கும்
GRA
ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிட்.
பம்பாய், கல்கத்தா, சென்னை, டெல்லி, பெங்களூர், செகந்திராபாத், பாட்னா.

# கல்கி

## பொருளடக்கம்

பராபவ, ஐப்பசி 28 ■ நவம்பர் 13





### நினைவுத் திரையில்...

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு,

நமஸ்காரம். தீபாவளிக்கு முதல் நாள் இரவு உள்ளத்திலுள்ள உற்சாகத்தை யெல்லாம் ரேஷன் கடைகளில் காலியாக்கி விட்டு, சுமார் பத்து மணிக்கு வீடு திரும்பியபோது கல்கி தீபாவளி மலர் என் கையில் கிடைத்தது. சந்தோஷத்தால் துள்ளிக் குதித்தேன். 'ஆனந்த நடன'மே ஆடி விட்டேன். 'மெய்ப் பொருளை'யே கண்டு விட்டது போன்ற ஓர் உணர்ச்சி! உடல் அலுப்பினால் உறக்கம் வரும் போலிருந்தது. "ஏ, உறக்கமே! நான் மலர் படித்து முடிக்கும் வரை 'நீ எங்கே! நான் எங்கே!'" என்று சொல்லிவிட்டு 'பரம பாகவத'ரின் பக்தி சிரத்தையுடன் படிக்க ஆரம்பித்தேன்.

ஒவ்வொரு வருஷமும் தமிழ் நாட்டு ரசிகர்களுக்கு இந்த விருந்தை விதம் விதமான அபிவிருத்திகளுடன் அளிப்பது தங்கள் கடமை. அதை அனுபவிப்பது எங்கள் பாக்கியம்.

- ஆர். எஸ். ஸ்வாமிநாதன்

கல்கி, நவம்பர் 3, 1946.


இலங்கையில் 35 சதம்: தபால் செலவு தனி.


"என்ன, இதை எடுத்துப் போட்டபின்புமா கஷ்ட நிவாரணம் கிடைக்கவில்லை?"
நில
தீர்வ
வரி
உணவு இறக்குமதி
விளைச்சலுக்குக் குறைந்த விலை
மண்டலக் கட்டுப்பாடு
வாழ்க்கைச் செலவின் உயர்வு
விவசாயி


ஸூப்பர் மார்க்கெட்டில் காங்கிரஸ் தேர்தல் டிக்கட்டையும் சலுகை விலைக்கு விற்போமா?
காங்கிரஸ்
பெறாப்
உற்சாக
டிக்கட்
போதிய
மில்லை
PK

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 □ இதழ் 15

# அமளிக்குக் காரணம் யார்?

சென்ற ஒரு வார காலமாக ஆந்திர நாட்டில் நடைபெற்று வந்த அமளி துமளி ஓய்ந்து அமைதி ஏற்படும் என்று நம்புகிறோம். இவ்வமைதி நீடிப்பதாக!

இவ்வளவு அமளிக்கும் காரணம் அரசாங்கம்தான். ஆயிர வருஷ காலமாகப் பல கோடிக்கணக்கான பக்தர்களும், மகான்களும் புனிதப்படுத்திய தேவாலயங்களை விட மிகச் சிறந்தவை இன்றுள்ள எஃகுத் தொழிற்கூடங்கள் என்று பேசி, தவறான கருத்துக்கள் உருவாக இடம் கொடுத்தது அரசாங்கம்தான். இப்படிப் பேசிப் பேசி நம் மக்கள் மனத்தில் தவறான பேராசைகள் வளர ஆளும் கட்சித் தலைவர்கள் இடம் அளித்து விட்டார்கள்.

ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் இல்லத்தில் பூஜை அறை வைத்துக் கொள்வதைப் போல், நாட்டில் மக்கள் ஒவ்வொருவரும் தங்கள் ஊரில் எஃகு ஆலை வேண்டும் என்று கேட்கத் தலைப்படுவார்கள் போலிருக்கிறது!

போதாததற்கு, மத்திய சர்க்கார் மந்திரி சபையில் சேரும் ஒவ்வொரு மந்திரிக்கும் தாம் அகில இந்தியாவுக்கும் மந்திரி, அகில இந்தியாவின் நலமே தமக்கு முக்கியம் என்ற எண்ணம் போய், தங்கள் தங்கள் ராஜ்யத்துக்கு, தொகுதிக்கு என்ன செய்யலாம் என்பதைச் சிந்திப்பதே தொழிலாகவும், மூச்சாகவும், பேச்சாகவும் இருந்துவருகிறது.

நாட்டில் மூன்று இடங்களில் சிறு எஃகுத் தொழிற்கூடங்கள் நிறுவச் சாத்தியக் கூறுகள் உண்டு என்று பேசப்பட்டு வந்தது. ஒன்று தமிழகத்திலுள்ள சேலம். இரண்டாவது ஆந்திராவில் உள்ள விசாகப்பட்டினம். மூன்றாவது மைசூர் ராஜ்யத்திலுள்ள ஹோஸ்பெட். இந்த மூன்று இடங்களில் சேலம் இரும்புக் கனியைப் பற்றித்தான் பலப்பல ஆண்டுகளாகப் பேச்சு அடிபட்டு வந்தது. அதற்குத்தான் பூர்வாங்கப் பரிசீலனைகளும் திட்டங்களும் விரிவாக வகுக்கப்பட்டன. இதை நிறுவப் போவதாகத்தான் அரசாங்கத்தாரும் பத்து ஆண்டுகளாகப் பேசி வந்தனர். ஆனால் ஏதோ காரணங்களால் தள்ளிப் போட்டு வந்தனர்.

1962ல் தேர்தல் முடிந்து, திரு சி. சுப்பிரமணியம் கனரகத் தொழில் மந்திரியானதும், இவர் காலத்தில் சேலம் இரும்புத் தொழிற்சாலை ஏற்படும் என்று நாட்டில் எல்லாருமே எதிர்பார்த்தார்கள். ஆனால், இவரிடமிருந்து கனரகத் தொழில் மந்திரி பதவி ஆந்திராவைச் சேர்ந்த திரு சஞ்சீவி ரெட்டியாரிடம் மாற்றப்பட்டது. இவர் குறுகிய மனப்போக்குடன், ''சேலத்தை விட முக்கியம் விசாகப்பட்டினம்'' என்று சொல்லி வைத்தார். அப்போதே தமிழக மக்கள் மனம் சோர்ந்தனர். ஆனாலும் அமைதியாக இருந்தனர்.

நாட்டில் அந்நியச் செலாவணி நெருக்கடி அதிகமாக அதிகமாக நான்காவது திட்ட காலத்தில் பொதுத் துறையில் பெரிய புது ஆலைகளைத் தொடங்கி நடத்திக் கொண்டு போவது கடினமாக இருக்கும் என்று ஆட்சியாளர்கள் கருதலாயினர். ஆகவே, இந்தமூன்று தொழிற்கூடங்களைப் பற்றிய தஸ்தாவேஜிகளைக் கட்டி வைத்தனர்.

ஆனால் விதை யொன்று போட்டால் சுரை யொன்று முளைக்குமா? மத்திய மந்திரிகள் வளர்த்துவிட்ட குறுகிய நைப்பாசை, இப்பொழுது விபரீதமாக வளர்ந்து பெரும் மாணவர் கிளர்ச்சியாகி விட்டது.

ஆசாரிய கிருபளானி அவர்கள் நாட்டில் கிளர்ச்சிகள் நடைபெறுவதற்குக் காரணம் ஆளும் வர்க்கத்தினர்தான் என்றது எவ்வளவு சரியாக இருக்கிறது!

எஃகுத் தொழில் பற்றிய உண்மை நிலவரம் என்ன? ஏற்கனவே பூதாகாரமாக ரூர்கேலா, துர்காபூர், பிலாய் ஆகிய

இடங்களில் நிறுவப்பட்டுள்ள எஃகுத் தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் எஃகு உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் விற்பனை செய்ய முடியாமல் தேங்கிக் கிடக்கின்றது. இத்தொழிற்கூடங்கள் தொடங்கப் பல ஆயிரக்கணக்கான கோடி ரூபாய்கள் வெளிநாடுகளில் கடன் வாங்கப்பட்டுள்ளது. இந்தக் கடன்களுக்கு ஈடு கொடுக்க வேண்டிய பொறுப்பு ஏழை இந்தியன் தலையில் விழுந்திருக்கிறது. இதை நேர்முக, மறைமுக வரிகள் மூலம் அரசாங்கம் மக்களிடம் வாங்கி இட்டு நிரப்ப வேண்டியிருக்கிறது. இந்த உண்மையை வெளிப்படச் சொல்ல முடியாமல் தவறான ஆசைகளை வளர்க்கிறது அரசாங்கம். இப்படிப்பட்ட வார்த்தைகளை நம்பிப் பல ஆயிரக்கணக்கான மாணவர்கள், தவறான சிறு நோக்கங்களுக்காகத் தங்கள் மகத்தான சக்தியை விரயம் செய்கிறார்கள். பொருளாதாரப் பிரச்னைகளைப் பொருளாதார ரீதியில் தான் தீர்க்க வேண்டும். பிரதேசப் பற்றைக் கொண்டு பொருளாதார விஷயத்தில் தலையிட்டால், மற்றப் பிரதேசத்தினரும் அதே போல் செய்யக்கூடும். மாணவர்கள் இதை உணர்ந்து தங்கள் மகத்தான சக்தியை ஜனநாயக முறையில் பயன்படுத்தி இந்த ஆட்சியை அப்புறப்படுத்தி யோக்கியமான ஆட்சி ஏற்படச் செய்தார்களானால் தேசம் அவர்களுக்கு நன்றி தெரிவிக்கும்.

# கல்கி தீபாவளி மலர்

**க**ல்கியின் வெள்ளிவிழா ஆண்டில் வெளியாகும் கல்கி தீபாவளி மலர் பலவிதங்களிலும் சிறப்பாக அமைய வேண்டும் என்று பெருமுயற்சி எடுத்துக் கொண்டுள்ளோம். அட்டைப்படமே இதற்குச் சான்று கூறுகிறது. உமாதேவியுடன் இருந்து அவளது அலங்காரத்துக்கு உதவுவோர் சாமான்ய மானவர்களா? கலைமகளும் திருமகளும் இந்திராணியுமே அல்லவா! ஓவியர் 'மணியம்' தீட்டியுள்ள இந்த ஓவியத்திலிருந்து கண்களை அகலவிட மனமின்றியே பக்கங்களைப் புரட்டினால் முகப்புப் படமாக ஆசார்ய சுவாமிகளின் அருட் திருமுகம் காட்சி தருகிறது. இன்னும் ஓவியர் ராஜத்தின் 'கண்ணனை மணந்த காரிகையர்', வினுவின் 'தீபாவளி பிறந்தது' ஆகிய வண்ணப் படங்கள் நெஞ்சை அள்ளுகின்றன என்றால் கனுதேசாயின் 'வானமும் கானமும்' என்ற சித்திரமடலில் வர்ண ஜாலங்களையே காண்கிறோம். இத்துடன் சித. நாச்சியப்பன் வண்ணப் புகைப்படங்களாகத் தரும் நேபாளக் காட்சிகளும் ஸ்விட்ஜர்லாந்து காட்சிகளும் இடம் பெறுகின்றன. பலவண்ணப் படங்களுக்கு ஒரு முடிவே இல்லையோ என்று எண்ணுமளவுக்கு ஓவியர்கள் விஜயாவும், கல்பனாவும், பானுவும் வேறு தங்கள் தங்கள் திறமையைக் காட்டியிருக்கின்றனர். இன்னும் கேளுங்கள்: விண்வெளியுகம், திருவக்கரைக் காட்சிகள், நாடக மேதைகள், சுவாமிகள் சொன்ன கதைகள் என்ற நான்கு தலைப்புக்களில் இரு—வர்ண சித்திர மடல்களும் இடம் பெறுகின்றன.

இப்படி ஒரே வண்ணச் சித்திரங்கள் நிரம்பியுள்ள மலரில் கருத்துச் செறிவுள்ள கட்டுரைகளுக்கும், இதயத்தை நெகிழ்விக்கும் அற்புதமான சிறுகதைகளுக்கும் குறைவேயில்லை. மதிப்புக்குரிய ராஜாஜிக்குப் பிறகு ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன், பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியார், டாக்டர் வே. ராகவன், ஸ்ரீமதி ருக்மிணி தேவி, திருமுருக கிருபானந்தவாரியார், பேராசிரியர் அ. சீநிவாச ராகவன், சச்சிதானந்தம் பிள்ளை, ஏ. என். சிவராமன் போன்ற அறிஞர்களது எளிமையும் கருத்தாழமும் மிக்க கட்டுரைகள் இத்தீபாவளி மலரின் சிறப்புக்குத் துணை புரிகின்றன.

இம்மலரிலே கவிதைகளுக்கும், சிறுகதைகளுக்கும் குறைவேயில்லை. இம்மலரில் மற்றொரு விசேஷ அம்சம், புகழ்பெற்ற பிரபலமான பல சிறுகதை ஆசிரியர்களின் படைப்புக்களுடன் இளம் எழுத்தாளர்களின் சிறுகதைகளும் பிரசுரமாகியிருக்கின்றன என்பது தான். இதனால் தீபாவளி மலரின் தரம் எள்ளளவும் குறையவில்லை என்பதொன்றே இந்தப் புதிய பரம்பரைக்கு நாம் அளிக்கக் கூடிய பாராட்டும் நல்வாழ்த்தும் ஆகும்.

நகைச்சுவை அம்சத்தைக் கவனித்து மிகச் சிறப்பாகச் செய்திருக்கிறார் ஸ்ரீ சாமா. அவரும் ஸ்ரீ உமாபதியும் சுதர்ஸனும் கீதாவும் தீபாவளித் திருநாளில் மகிழ்ச்சி நிரம்பிய சிரிப்பு நமது இல்லங்களிலெல்லாம் நிலவ வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டு அதற்காக உழைத்திருக்கிறார்கள். தீபாவளித் திருநாளில் மட்டுமின்றி அதன் பிறகும் இந்த மங்கலச் சிரிப்பும் ஆனந்தமும் நேயர்களின் இல்லங்களிலெல்லாம் நீடித்திருக்க இறைவன் அருளை வேண்டுகிறோம்.

# சென்னை பட்ட பாடு!

**எ**ன்ன காற்று! என்ன புயல்! என்ன மழை! மூன்று கப்பல்கள் சென்னை துறைமுகத்துக்கு அண்மையில் தரை தட்டித் தவித்த பரிதாப வரலாற்றைப் படித்தவர்கள் இரண்டு விஷயங்களைப் புரிந்து கொண்டிருப்பார்கள். புயல் எவ்வளவு வேகமாக வீசியிருக்கிறது என்பது ஒன்று. நவீன விஞ்ஞான முன்னேற்றம் எவ்வளவோ ஏற்பட்டும் கப்பல்கள் சென்னைத் துறைமுகத்துக்கு அண்மையிலிருந்தும் இயற்கை விளைவித்த உற்பாதத்திலிருந்து அவற்றை மீட்க முடியாமற் போன மனித சக்தியின் குறைபாடு இரண்டு.

இவை தவிர சென்னை நகரில் அன்றடித்த பேய்க் காற்றில் எத்தனை குடிசைகள், கற் கட்டடங்கள் சரிந்தன! எத்தனையோ காலத்து மரங்கள் வேரோடு பெயர்ந்தன! எத்தனை மின்சாரக் கம்பங்கள் டெலிபோன் கம்பங்கள் சரிந்து விழுந்தன! பல பகுதிகளில் மின் சாரமே இல்லாமல் மக்கள் மூன்றுந் தேதி இரவு கடும் இருளிலேயே கழித்தனர். தொலை பேசிக் கம்பிகள் அறுபட்டதால் தொலைபேசி இருந்தும் பயன்படுத்த முடியாமல் அவதி யுற்றனர். சாலைகளில் பெரும் மரங்கள் விழுந்து போக்குவரத்து தடைப்பட்டது. காரியாலயங்களுக்குச் செல்லும் ஆடவர்கள், பெண்மணிகள் காரியாலயங்களுக்குத் தொப்ப லாக நனைந்து வந்து சேர்ந்தார்கள்.

சென்னை நகரில் பல பகுதிகளில் தண்ணீர் தேங்க ஆரம்பித்து விட்டது. முழங்கால் மூட்டுத் தண்ணீரில் பஸ்களும், கார்களும், டாக்ஸிகளும் ஊர்ந்து சென்றன! இவ்வளவு பெரிய நகரத்தில் தண்ணீர் சீக்கிரமாக வடிந்து போகத் தக்க வசதி கிடையாது. சாதாரண மழைக்கே சென்னை நகரம்—நரக மாகிவிடும். இப்போது கேட்க வேண்டுமா!

இவ்வளவு தொல்லைகளுக்கிடையில் மக்கள் கவனமெல்லாம் அரிசி ரேஷனைச் சுற்றித் தான் வந்து கொண்டிருந்தது.

''போன மாத மழைக்கே 'கைவசம் இருப்பு இல்லை. தஞ்சை ஜில்லாவிலிருந்து நெல் குத்தி வரவேண்டும். அதனால் மூன்று நாளுக்கான அரிசி, புழுத்த அரிசியோ, புழுங்க லரிசியோ தருகிறோம், வாங்கிக் கொள் ளுங்கள்' என்றார்களே! அந்த நிலைமை முழுதும் சீர்திருத்தியபாடில்லை, அதற்குள் இப்புயலும் மழையும் வந்து விட்டனவே! அரசாங்கம் என்ன சொல்லப் போகிறேதா!'' என்று ஏங்கத் தலைப்பட்டுவிட்டார்கள்!

புயல் தணியலாம். ஆனால் உணவுக் காகத் தவிப்பது என்று தணியுமோ!



## காஞ்சி காமகோடி பீடம்
## ஜகத்குரு
## ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள்

# ஆசியுரை

இவ்வாண்டு ஐப்பசிக் கடை வெள்ளியன்று வெள்ளி முளைக் கும்போது, தீபங்கள் பொலிய உதயமாகும் தீபாவளி உலகத்துக் கெல்லாம் விளக்கம் கொடுத்து நன்மையையே வளர்க்குமாக.



★

விசாகப்பட்டினத்தில் மாணவர் கிளர்ச்சி பயங்கரமாக வளர்ந்துவிட்டதைக் கண்டோம். தேசத்தில் ஏழை மக்களின் வாழ்க்கை மிகவும் கஷ்டத்துக்கு ஆளானபடியால்தான், அவர்கள் எதற்கும் ஆத்திரமடைந்து, அறிவிழந்து கிளர்ச்சி, தீ வைத்தல், கொள்ளை போன்ற குற்றங்களைச் செய்பவர்களுடன் சேர்ந்து கொள்கிறார்கள். இன்னலடைந்தவர்கள் இவ்வாறு செய்வது இயற்கையே.

விஷயமறிந்தவர்கள் ஓர் உருக்கு ஆலை இன்ன இடத்தில் அமைந்தால்தான் உற்பத்தியும் விநியோகமும் நல்ல முறையில் நடக்கும் என்று கூர்ந்த ஆலோசனையின் மீது கூறினால் அதை அனைவரும் ஏற்பதே முறை. இந்திய தேசத்தின் எந்த இடத்தில் அமைந்தால் தேசம் முழுவதற்கும் லாபகரமோ, சௌகரியமோ அங்கு அது அமையவேண்டும். ஓர் ஆலை அமைக்கப்பட்டுள்ள பிரதேசத்திலுள்ளவர்களுக்கு மட்டும் அதனால் தனிப்பட்ட லாபம் கிடைக்கும் என்று நினைப்பது நம் மக்களிடம் பொதுவாக உள்ள அறியாமையையே காட்டுகிறது.

ஆனால் இதைவிட முக்கியமான விஷயத்தையும் இப்போது உணர முடிகிறது. சட்ட



சபை மூலம் இயங்க வேண்டிய ஜனநாயகத்தின் இடத்தைக் கிளர்ச்சியும் உண்ணாவிரதங்களும் பிடித்துக் கொள்ளப் பார்க்கின்றன. நாம் சுயராஜ்யம் அடைவதற்குக் கடைப்பிடித்த சில வழிகளுக்காக இப்போது நாமே பளுவான கூலி கொடுக்கிறோம். ரயில் ஸ்டேஷன்களுக்கும், சர்க்கார் பாங்குகளுக்கும் தீ வைத்து, போக்குவரத்தைப் பாழ்படுத்தினால் உடனுக்குடனே காபினெட் மந்திரிகள் கூடி முடிவுகள் எடுக்கிறார்கள் என்பதை நாடு நன்றாகப் பார்த்துவிட்டது. கிளர்ச்சிகளை அடக்கப் போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் செய்வதால் உடனடியாக அமைதியை, ஒழுங்கை ஏற்படுத்த முடியலாம்; ஆனால் ஜனநாயகத்துக்குச் செய்யப்படும் தீங்கு நீங்காமல் இருக்கும்.

★

ஜிங்கோ (Ginkgo) என்ற மரத்தின் இலைகளிலிருந்து இருமல், ஜலதோஷம் இவற்றுக்கு அதிசயிக்கத்தக்க முறையில் நிவாரணம் பெற டாக்டர் ஜோஸின் வால்க்னர் மருந்து கண்டுபிடித்திருக்கிறார். இத்தகவலை 'ஜெர்மன் ட்ரிப்யூன்' கூறுகிறது. ஆதியில் கிழக்காசியாவில் வளர்ந்த விசிறி போன்ற இலை கொண்ட ஜிங்கோவை இப்போது சீன மாகாணமான ஷான்டுங்கில் மட்டுமே காண முடிகிறது. இம்மரங்கள் ஜெர்மனியில் உள்ள ஹாம்பர்க் தோட்டத்திலும் பயிரிடப்பட்டுள்ளன. இவற்றின் இலைகளிலிருந்து எடுத்த சாற்றின் ஆவியை டாக்டர் வால்க்னர் நோயாளிகளைச் சுவாசிக்கும்படி செய்தார். அதிசயமான நற்பலன் கிடைத்தது. சளி கொட்டுவது நின்றதோடு, இருமல் ஜலதோஷம் சம்பந்தப்பட்ட வீக்கம், புண் இவையும் உடனே குணமாயின. ஆஸ்துமா உள்ளவர்களுக்கும்கூட இந்தப் புகைச் சுவாசம் அரிய பலனைத் தந்தது.

இதிலிருந்து டாக்டர் அவர்கள் கண்ட முடிவு குறிப்பிடத்தக்கது. ஜிங்கோ இலையிலுள்ள ஓர் அம்சம் நோயுற்ற ஜீவ அணுக்களைக் குணப்படுத்துகிறதாம்; அதன்பின் அந்த ஜீவ அணுக்களே பிரச்னையைத் தீர்த்துவிடுகின்றனவாம். நோய்க் கிருமிகள் அழிந்து அகன்று விடுகின்றன. நுரையீரல் குழல்களும் மூக்கு வழிகளும் நன்றாக விரிய முடிகிறது. செயலற்றிருந்த நுரையீரல் பகுதி மறுபடியும் செயலாற்றுகிறது. உலக முழுவதும் பரவியுள்ள ப்ராங்கைடிஸ் என்ற நுரையீரல் வியாதியைக் குணப்படுத்த இம்மருந்தை உபயோகிக்கலாம் என்று வால்க்னர் கருதுகிறார்.

★

இன்பத்தைத் தேடிப் பெறுவது பிரஜைகளின் மறுக்கவொண்ணாத உரிமை என்று அமெரிக்காவின் சாஸனகர்த்தர்கள் கருதினர். இன்பத்தை அடைவதற்குள்ள பல வழிகளில் ஒன்றே செல்வ சுபிட்சம். ஆனால் செல்வமே இன்பம் என்ற தவறான கருத்து பிற்காலத்தில் ஏற்பட்டு, செல்வத்தைத் தேடுவதே இலட்சியமாகி விட்டது. செல்வ வேட்கைக்கு முடிவு கிடையாது. அது ஒரு போதும் திருப்தி பெறாது. செல்வ வேட்டையால் இன்று இன்பம் கிடைக்கவில்லை. அமைதியின்மையும், உயரிய இலட்சியங்களின் சீரழிவும்தான் ஏற்பட்டுள்ளன.

வேறு சில நாடுகள் சமத்துவத்தை இலட்சியமாகக் கொண்டன. இதற்கு 'சோஷலிஸம்' என்று பெயரிட்டனர். இதன் விளைவாக ஏமாற்றமும், ஆத்திரமும் ஏற்பட்டு, அநாகரிகமே விளைந்திருக்கிறது. சீனத்தில் தற்போது நடக்கும் புதிய புரட்சி இயக்கத்தைப் பார்த்தால் கம்யூனிஸம் அளித்த ஏமாற்றம் எத்தகைய அநாகரிகத்தை உண்டாக்கியுள்ளது என்பது தெரியும்.

இன்பம் என்பது செல்வத்தின் மீதோ, சமத்துவத்தின் மீதோ ஏற்பட்டு விடாது. தார்மிகமான, ஆன்மிகமான பண்புகளின் மீதே இன்பம் அமையும். இப்பண்புகளைச் செல்வ வேட்டையும், காரிய சாத்தியமற்ற சமத்துவத் திட்டங்களும் அரித்தெடுக்கின்றன. ஏற்றத் தாழ்வுகளை அகற்ற வேண்டும் என்ற ஆசையையும், அதற்காகச் சட்டதிட்டங்கள் போடுவதையும் போற்ற வேண்டும். இதே போல் செல்வம் சேர்ப்பதையும் எதிர்ப்பதற்கில்லை. ஆயின், இவ்விரு மானிட முயற்சிகளில் ஏற்படும் மிகையான போக்கே தேசங்களை இன்பத்திலிருந்து வெகுதூரத்துக்கு அப்பால் இழுத்துச் சென்று விடுகிறது.

# மகத்தான தினம்

**வி. வி. நரசிம்மன்**

சென்ற அக்டோபர் மாதம் 23ந் தேதி ஞாயிற்றுக் கிழமையன்று ஐக்கிய நாடுகளின் ஆண்டு விழாவை முன்னிட்டு ஐ. நா. பொதுச் சபையில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்பு லக்ஷ்மி நிகழ்த்திய கச்சேரி ஒரு பரிபூரண வெற்றியாக அமைந்தது. அசாதாரணமான முறையில் சபை நிரம்பியிருந்தது மட்டு மின்றி, சர்வ தேசங்களையும் சேர்ந்த சபை யோர் நிகழ்ச்சி முழுவதையும் இசையில் கட்டுண்ட நிலையில் கேட்டநுபவித்தனர்.

கச்சேரி தொடங்குமுன் நான் இந்திய சங்கீதத்துக்கும் மேனாட்டு இசைக்குமுள்ள அடிப்படை வேற்றுமைகளைச் சுருக்கமாக விளக்கினேன். எம். எஸ். கச்சேரியை ஒட்டிச் சபையோருக்கு அளிக்கப்பட்டிருந்த நிகழ்ச்சிப் புத்தகத்தில் மேனாட்டினர் இந்திய இசையை ஓரளவு புரிந்து கொள்வதற்காகத் தந்திருந்த விளக்கங்களையும் சுட்டிக் காட்டி னேன். இதன் பின் தம்புரா மீட்டிய ஸ்ரீமதி விஜயா ராஜேந்திரன், மிருதங்கம் ஸ்ரீ டி.கே. மூர்த்தி, கடம் ஸ்ரீ டி. எச். விநாயகராம், உடன் பாடும் ஸ்ரீமதி ராதா விசுவநாதன், வயலின் ஸ்ரீ வி. வி. சுப்பிரமணியம் ஆகி யோரையும், கடைசியில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியையும் ஒவ்வொருவராகச் சபை யோருக்கு அறிமுகம் செய்தேன். அவர வரின் பாகத்தையும் விளக்கினேன்.

'ராம நன்னுப்ரோவரா'வுடன் கச்சேரி தொடங்கியது. அடுத்து பந்துவராளியில் 'ஸாரஸாக்ஷ' விரிவாகப் பாடப்பெற்றது. விதுஷி சங்கராபரணம் பாடும்போது அவை யோர் உடல் புளகமுற்றிருந்தனர். 'ஸரோஜ தளநேத்ரி'க்குப் பின் மிருதங்கம்-கடத்தின் தனி ஆவர்த்தனம். ஸ்ரீ மூர்த்தியும் ஸ்ரீ விநாயகராமும் பல கட்டங்களில் அன்று ஐ. நா. சபையினரின் கரகம்பத்தைப் பெற்றனர்.

'ரங்கபுர விஹார' பாடலை எம். எஸ். பாடியவுடன் கச்சேரியின் முதல் பாதி முடிந்து இருபது நிமிஷங்கள் இடைவெளி அளிக்கப்பட்டது. கச்சேரி மீண்டும் தொடங்

ஐ. நா. சபையில் ஸ்ரீமதி எம். எஸ். இசைக் குழுவினரும் ஸ்ரீ சதாசிவமும். நடுநாயக மாக உள்ள ஐ. நா. சபை பிரதம காரியதரிசி ஊதாண்ட் அவர்களுக்கு வலதுபுறம் ஐ. நா. பொதுச்சபைத் தலைவர் பாஷ்வாக்; இடதுபுறம் முறையே ஜேம்ஸ் ரூபின், ஐ. நா. சபை இந்தியப் பிரதிநிதி ஜி. பார்த்தசாரதி, துணைக் காரியதரிசி சி. வி. நரசிம்மன்.



கும் முன்பு பிரதம காரியதரிசி ஊ தாண்ட் அவர்கள் உரை நிகழ்த்தினார். அவர் சென்ற ஆண்டிலேயே எம். எஸ்ஸுக்கு அழைப்பு அனுப்பியிருந்தபோதிலும் அப்போது நிகழ்ச்சி நடைபெற இயலாமற் போனதைக் குறிப்பிட்டுவிட்டுத் தொடர்ந்தார்:

''ஒரு மணிக்கு அதிகமாக நீங்கள் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியின் இசையைக் கேட்டிருக்கிறீர்கள். இந்தத் தொடக்கம் ஒரு பூரணமான வெற்றி என்று என்னோடு நீங்களும் ஒப்புக் கொள்வீர்கள் என்று நம்புகிறேன். உங்களில் சிலருக்கு இவ்விசை அந்நியமாகத் தோன்றக் கூடுமெனினும் அசாதாரணமான உத்தம சங்கீதத்தை இன்று நாம் கேட்டிருக்கிறோம் என்று அனைவரும் ஒப்புவர். இக் கச்சேரிக்கு இவ்வளவு பெரும் கூட்டம் சேர்ந்திருப்பதே ஐக்கிய நாடுகளில் உள்ள நாம் புது அநுபவங்களை எவ்வளவு வரவேற்கிறோம் என்பதைக் காட்டுகிறது. என்னைப் பொறுத்த மட்டில் ஏராளமான இந்திய ஜனத்தொகை கொண்ட பர்மாவின் பிரஜையான நான், முன்பே ஓரளவு இந்திய இசையைக் கேட்டதுண்டு; எனினும் இன்று நம் அனைவரின் ஆனந்தத்துக்காகவும் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியும் அவரது கோஷ்டியினரும் அளித்த இசை எனக்கொரு புது அநுபவமாகவே இருந்தது.

''ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மிக்கும் அவரது சகாக்களுக்கும் கிடைக்கும் ஆர்வம் மிக்க வரவேற்பு சங்கீதத்துக்குப் பூகோள ரீதியில் எல்லையே கிடையாது என்று நிரூபித்து விட்டது. (இதற்கு நிரூபணம் தேவை என்று நினைத்தால்!) சங்கீதம் பிரபஞ்சத்துக்குப் பொதுவான ஒரு மொழியைப் பேசுகிறது. நம் அனைவரையும் கவருகிறது என்பது நிரூபணமாகி விட்டது.

''இன்று பிற்பகல் நாம் இந்த இசை விருந்தைக் கேட்டு மகிழ்வதைச் சாத்தியமாக்கித் தந்தது இந்திய சர்க்காரின் தயாளம்தான். அவர்களுக்கு எனது நன்றியைச் செலுத்த இவ்வாய்ப்பைப் பயன் செய்து கொள்கிறேன். அதோடு ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மிக்கும், அவரது இசைக் குழுவினருக்கும் மட்டுமின்றி, இப்போது இங்கு பிரசன்னமாகியுள்ள அவரது கணவர் ஸ்ரீ சதாசிவத்துக்கும் நாம் நன்றிக் கடன் பட்டிருக்கிறோம்.

''ஸ்ரீமதி எம். எஸ். தமது தாய்நாட்டில் பெரும் பெயர் படைத்த இசைக் கலைஞர்களில் ஒருவர். சர்வ தேச ஆதரவிலும்—குறிப்பாக இரண்டாண்டுகளுக்கு முன்பு எடின்பரோ இசை விழாவில் — பாடியிருக்கிறார். எனினும் இதுதான் அவரது முதல் அமெரிக்க விஜயம் என எண்ணுகிறேன். இன்றையக் கச்சேரிக்கு முன்பு அவர் இந் நாட்டின் சில இடங்களில் கச்சேரிகள் செய்திருப்பதாயும், இனியும் வேறு பல இடங்களில் கச்சேரி செய்யப் போவதாகவும் அறிகிறேன்.

''இந்நாட்டில் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியும், அவரது குழுவினரும் வெற்றிகரமான சுற்றுப் பயணம் செய்வார்களெனவும் இங்கு அவர்கள் தங்கியிருக்கும் நாட்கள் ஆனந்தமாகச் செல்லும் என்றும் நம்புகிறேன்.''

ஊ தாண்ட் பேசி முடித்ததும் ராஜாஜியின் ஆங்கிலத் துதியை ஸ்ரீமதி எம். எஸ்ஸும் ராதாவும் மட்டும் நின்றவாறு பாடினர். ஹரால்ட் ஸ்க்ராம் (Harold Schramm) அவர்கள் இதற்குப் பியானோ வாசித்தார்.

'சிவ சிவ சிவபோ', 'ஜகதோத்தாரண', 'ஹரி தும ஹரோ', 'வடவரை' ஆகியவற்றைத் துதிக்குப் பின் பாடினார். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராசாரிய சுவாமிகளின் மங்களாசாஸனத்துடன் நிகழ்ச்சி நிறைவு பெற்றது.

சபையினர் நீண்ட நேரம் இடையறாது கரகோஷம் செய்து தங்கள் உற்சாகத்தைத் தெரிவித்துக் கொண்டனர். எம். எஸ். குழுவினர் அரங்கிலிருந்து கிளம்பிய பின்னரும்

எளிமையும் எழிலும் மிக்க அலங்கார மேடை அமைப்பும்.........



கரகோஷம் நிற்காததால் கலைஞர்கள் யாவரும் மீண்டும் மேடைக்கு வந்து வந்தனம் செலுத்த வேண்டியதாயிற்று.

கச்சேரி முடிந்த பின்பு பல அரசாங்கங்களின் தூதர்கள் என்னிடம் நிகழ்ச்சி குறித்துத் தங்கள் பாராட்டுதலைத் தெரிவித்தனர். இது வெறும் உபசாரப் பண்பு மட்டுமல்ல, சுப்புலக்ஷ்மியின் கலைத் தேர்ச்சியிலும், இசை ஞானத்திலும் உண்மையாகவே மகிழ்ந்து தான் அவர்கள் பாராட்டுத் தெரிவித்தனர் என்பதில் எனக்கு ஐயமில்லை. கச்சேரி முடிந்த பின் சுப்புலக்ஷ்மியை ரசிகர்கள் 'முற்றுகை' யிட்டுச் சூழ்ந்து கொண்டனர். இசைக் கோஷ்டியினருக்காகப் பிரதம காரியதரிசி ஊ தாண்ட் ஐக்கிய நாடுகள் சபையின் தெற்குப் புறத்தில் (South Lounge) அளித்த விருந்துபசாரத்துக்கு அவர்களை அழைத்து வருவது எனக்குச் சற்றுச் சிரமமாகவே ஆகிவிட்டது. ஏராளமான புகைப்படங்கள் எடுக்கப் பட்டன. அளவற்ற பாராட்டுதல்களும், நல் வாழ்த்துக்களும் மதிப்புக்குரிய விருந்தினரால் தெரிவிக்கப்பட்டன.

மொத்தத்தில் இது ஒரு மகத்தான தினம். சுப்புலக்ஷ்மிக்கு மட்டுமல்ல; இந்திய சங்கீதத்துக்கே மகத்தான தினம்.

பாக்கியவசமாக நிகழ்ச்சி அரங்கேறியது விஜய தசமியாகும். சர்வ தேசத்தையும் சேர்ந்த சபையோருக்குக் கர்நாடக சங்கீதத்தை அறிமுகப்படுத்த இது உண்மையாகவே ஒரு மங்கல நாளாக அமைந்தது.

# மகுடத்தில் பதித்த மணி

ஐ. நா. பொதுச் சபையில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரி அதிசிறப்பாக, அமோக வைபவமாக, சங்கீத மகோற்சவமாக நடந்தேறியதை வாசகர்கள் யாவரும் அக்டோபர் 28ந் தேதியன்று இரவு வானொலி அஞ்சலைக் கேட்டும் புரிந்து கொண்டிருப்பார்கள்.

இந்தக் கச்சேரி இனிது நிறைவேறுவதற்குப் பல விதத்திலும் காரணமாக இருந்த ஐ. நா. சபைக்கு-குறிப்பாகப் பிரதம காரியதரிசி ஊ தாண்ட் அவர்களுக்கும் துணைக் காரியதரிசி ஸ்ரீ வி. வி. நரசிம்மன் அவர்களுக்கும் நமது நாட்டின் ஐ. நா. பிரதிநிதி ஜி. பார்த்தசாரதி அவர்களுக்கும் நெஞ்சார நன்றி கூற வேண்டும்.

ஊ தாண்ட் அவர்களும் ஸ்ரீ பார்த்தசாரதி அவர்களும் சேர்ந்து இக்கச்சேரிக்கான அழைப்பிதழ்களை அனுப்பியிருந்தார்கள்.

கச்சேரியை ஒட்டி ஐ. நா. சபை ஸ்ரீமதி எம். எஸ். அவர்களைப் பற்றிய பல விவரங்கள், வாழ்க்கை வரலாறு ஆகியவை அடங்கிய ஒரு விளக்கமான பத்திரிகை அறிக்கை விடுத்திருந்தது.

கச்சேரி முடிந்தவுடனே இரவோடு இரவாகப் பின்வரும் கடிதத்தை நமக்கு எழுதி அனுப்பியிருக்கிறார் ஜேம்ஸ் ரூபின்:

மிகுந்த உணர்ச்சியூட்டிய, மிகுந்த திருப்தியூட்டிய, மிகுந்த உள்ளச் சிலிர்ப்பை உண்டாக்கிய ஒரு நிகழ்ச்சி நிறைவேறிச் சில மணிகளுக்குள் இதனை எழுதுகிறேன்.

இது ஒரு மகத்தான தினம். ஐக்கிய நாடுகள் சபையில் ஸ்ரீமதி எம். எஸ்ஸின் கச்சேரி நடந்து முடிந்து விட்டது. முடிந்து விட்டதா ? எங்களுக்கு உயிருள்ள வரையில் அது எங்கள் நினைவில் வாழும். இன்று எப்பேர்ப்பட்ட பூரணத்துவம் நிரம்பிய நாள் என்பதை, இசை நிகழ்ச்சி முடிந்து இவ்வளவு சீக்கிரத்தில் வருணிக்க இயலாது. இன்னும் ஒரு வாரத்தில் வேண்டுமாயின் தெளிவு படுத்திக் கொண்டு எழுதுவேனாயிருக்கும்.

..........ஆடாமல் அசையாமல் அமர்ந்து பேரானந்த அனுபவம் அடைந்த பல தேசப் பிரதிநிதிகளும்.



சுருங்கச் சொல்கிறேன்: ஐ. நா.வின் பொதுச்சபை மன்றம் நிரம்பி வழிகிற அளவுக்குச் சுமார் இரண்டாயிரம் பெருமக்கள் கூடியிருந்து, ஒவ்வொரு ஸ்வர ஸ்தானத்திலும் சொக்கி அமர்ந்திருந்தனர்.

இன்றிலிருந்து இந்த அமெரிக்கச் சுற்றுப் பிரயாண நினைவுகளைப் பற்றி நாங்கள் கொள்ளக்கூடிய ஆனந்தத்தை எதுவுமே மங்கச் செய்ய முடியாது. ஏனெனில், அதி முக்கியமான கச்சேரி — எந்த ஒன்றுக்கு எம். எஸ். பிரத்தியேகமாக அழைக்கப்பட்டாரோ அந்தக் கச்சேரி — அவரது அமெரிக்க வெற்றி விஜயத்துக்குச் சூட்டிய மகுடத்தின் மணியாகப் பிரகாசித்து விட்டது!

நாங்கள் மிக மிகச் சந்தோஷப்படுகிறோம்.

## நாதத்தின் மந்திர சக்தி

**ஜேம்ஸ் ரூபின் அக்டோபர் 22ந் தேதியன்று எழுதுகிறார்:**

அக்டோபர் 15ந் தேதி பாஸ்டனிலிருந்து புறப்பட்டு மிடில்டவுனிலுள்ள வெஸ்லியன் சர்வகலாசாலையின் இந்தியசங்கீத ஆராய்ச்சிக் கேந்திரத்துக்கு வந்து சேர்ந்தோம். இங்கு ஒரு மலைஉச்சியில் ரம்மியமான சூழலிலுள்ள ஓர் அழகிய, பழைய அமெரிக்கப் பண்ணை வீட்டில் தங்கினோம். இது சர்வகலாசாலையால் ஆசிய சங்கீத ஆராய்ச்சிப் பிரிவுக்கெனவே வாங்கப்பட்டது. இவ்வாராய்ச்சி, பேராசிரியர் ராபர்ட் ப்ரௌனின் மேற்பார்வையில் நடக்கிறது. இவர் இந்தியாவுக்குப் பன்முறை விஜயம் செய்திருக்கிறார்.

அக்டோபர் 17ந் தேதியன்று வெஸ்லியனில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி நிகழ்த்திய கச்சேரி இதுவரை அமெரிக்காவில் நடந்தனவற்றுள் மிகவும் 'கனமானது' எனலாம். இந்திய சங்கீதத்தில் மற்ற அமெரிக்கரைவிட நல்ல கேள்வியநுபவம் உள்ள வெஸ்லியன் ரசிகர்கள் இப்படிப்பட்ட சாஸ்திரோக்தமான, கனமான கச்சேரியை மிகவும் விரும்புவார்கள் என்று பேராசிரியர் பிரௌன் தெரிவித்திருந்தார். கச்சேரி இரண்டரை மணி நேரம் நடைபெற்றது. அமெரிக்க ரசிகர்களுக்கு இது வெகு நீண்ட காலமாகும். எனினும், சபையோர் ஆரம்பத்திலிருந்து முடிவு வரை ஆணியடித்தாற்போல் அமர்ந்திருந்தனர். கச்சேரியின் மையமான தோடி ராகம் — தானம் — பல்லவியின்போது ரசிகர்கள் அடிக்கடி ஆனந்த ஆரவாரம் செய்தனர். கச்சேரி முடிவில் அளிக்கப்பட்ட நீண்ட கரகோஷத்துக்கு முடிவு எப்போது பிறந்ததென்றால் ஸ்ரீமதி எம். எஸ். அரங்குக்கு மீண்டும் வந்து ஒரு பாடலைத் திரும்பப் பாடிய பிறகுதான்.

மறுநாள், அக்டோபர் 18ந் தேதி காலை, நாங்கள் வாஷிங்டனுக்குப் புறப்பட்டோம். வாஷிங்டன் கச்சேரிக்கு மறுநாள் இதை எழுதுகிறேன். நேற்று அரசாங்க இலாகா மன்றம் (State Department Auditorium) நிரம்ப எண்ணூறு பெருமக்கள் குழுமியிருக்க, அவர்களைத் தமது அற்புத கானத்தால் எம். எஸ். மெய்சிலிர்க்க வைத்தார். சங்கராபரண ராகம் பாடி முடிந்தவுடனும், இன்னும் கச்சேரியின் வேறு பல கட்டங்களிலும் அவையோர் கரகோஷம் செய்து இயல்பாகத் தங்களுக்கேற்பட்ட ஆனந்தத்தை வெளிப்படுத்தினர். கச்சேரி முடிந்த பிறகு இடிமுழக்கமென கரக்கம்பம் செய்த ரசிகர்கள் எம். எஸ். மீண்டும் ஒரு பாடலைப் பாடியபின் தான் திருப்தி அடைந்தனர். தாம் புதிதாக வெற்றி கொண்ட அவையோரை 'ஹரீதும ஹரோ' பஜன் மூலம் எம். எஸ். மகிழ்வித்தார்.

சபையோரில் இருந்த ஏராளமான பிரமுகர்களில் முக்கியமாகக் குறிப்பிடப்பட வேண்டியவர்கள், அமெரிக்க அரசாங்கக் காரியதரிசியின் (பிரதம மந்திரி என்றே சொல்லலாம்) மனைவி ஸ்ரீமதி டீன் ரஸ்க், அமெரிக்க உபஜனாதிபதியின் சகோதரி ஸ்ரீமதி ஃப்ரான்ஸிஸ் ஹவார்ட், உலக சுகாதார ஸ்தாபனத்தின் காரியதரிசி கார்டினர், அமெரிக்க சுப்ரீம் கோர்ட்டின் நீதிபதிகள், பல நாட்டுத் தூதர்கள், ராஜ நீதிக் குழுத் தலைவர் (Dean of the Diplomatic Corps) ஆகியோராவர். எனினும், வரப்பிரசாதமாக எம். எஸ். பெற்றுள்ள மகத்தான சங்கீதத்தைச் சபையினர் அனைவரும் உயர்வு தாழ்வு ஏதுமின்றி ஒரேபோல் ஆர்வத்துடன் ரசித்து மகிழ, சமத்துவ ஜனநாயகமே அங்கு நிலவியது!

**எம். எஸ்ஸின் இசை நிகழ்ச்சிகளை அமெரிக்காவின் புகழ்வாய்ந்த பத்திரிகைகளின் கௌரவம் வாய்ந்த விமரிசகர்கள் வானளாவப் பாராட்டிப் பரவச நடையில் எழுதுகிறார்கள். முன்பு போஸ்டன் ஹெரால்ட் விமரிசனத்தைத் தந்தோம். இனி வாஷிங்டனிலிருந்து வரும் 'ஈவினிங் ஸ்டார்' என்ற தினப் பத்திரிகையில் அக்டோபர் 22ந் தேதியன்று இர்விங் லோவன்ஸ் அவர்கள் எழுதியிருப்பதில் சில பகுதிகளைப் பாருங்கள்:**

நேற்றிரவு இசை உலகின் மகோன்னத கலைஞர்களில் ஒருவரான — இந்தியாவின் அசாதாரணப் பாடகியான — எம். எஸ். சுப்புலக்ஷ்மியுடைய மகத்தான கச்சேரியைக் கேட்கும் விசேஷ கௌரவம் வாஷிங்டனுக்குக் கிடைத்தது. இக்கச்சேரி அரசாங்க இலாகா அரங்கில் நடைபெற்றது.

நாளைக்கு அவரை ஐ. நா. சபையில் பாட அழைத்திருப்பது இதுவரை யாருக்கும் கிடைத்திராத கௌரவம். ஆனால் இந்தக் கௌரவத்துக்கு அவர் முற்றிலும் தகுதி பெற்றவர். இந்தியா, பாகிஸ்தான், இலங்கை, நேபாளம், மலேயா, பர்மா, தென்னாப்பிரிக்கா, கிழக்கு ஆப்பிரிக்கா ஆகியவை கொண்ட தமது உலகப் பகுதியில் அவர் அடைந்துள்ள புகழைக் கேட்டால் 'இது கட்டுக்கதையா?' என்று தோன்றும். ஆனால் இப்படிப்பட்ட புகழை அவர் எப்படிப் பெற முடிந்தது என்பதை நேற்று அறுதியிட்டு உறுதியாக அவர் நிரூபணம் செய்து விட்டார். நேற்று ஏராளமான மேல்நாட்டினர் கொண்ட பெரும் சபையை அவர் தமது சங்கீதத்தின் மந்திர சக்தியால் தன் வயம் இழக்கச் செய்து விட்டார்!

**இதன் பின் இந்திய - மேலை இசைகளிடை உள்ள வேறுபாட்டை விளக்கிவிட்டு விமர்சகர் தொடர்கிறார்:**

இசைக் கருவிகளில் இந்திய இசையின் உருவம் என்ன என்பது பற்றி அமெரிக்கருக்குச் சிறிதளவு பழக்கம் உண்டு. மகத்தான வாத்தியக் கலைஞரான (ஸரோட்) அலி

ர்கான் போன்றவர்களின் விஜயத்தாலும் ஹூதி மெனுஹின் செய்துள்ள இசைத் ட்டுப் பிரசாரத்தாலும் இதை நாம் அறி ராம். எனினும், நாம் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி ன்ற உயர் ஸ்தானம் வகிக்கும் வாய்ப் டகரை இதுவரை கேட்க வாய்ப்புப் ற்றதில்லை. வாத்திய இசைக்கும், வாய்ப் ட்டிசைக்கும் மகத்தான வேற்றுமை உள்ள தன்பது இப்போது தெரிந்து விட்டது. ப்புலக்ஷ்மியின் குரல் சுமந்து வரும் உணர்ச்சி ன் அடர்த்தியையும், மானுடப் பண்பு ரம்பிய எழிலையும் வாத்தியத்தில் காண்பது மம் — ஏன், அசாத்தியம் என்றே கூறலாம்.

அவரது குரலியக்கம் மேல்நாட்டுப் பாட களிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. அவர் ரல் நடுக்கத்தைப் பயன்படுத்துவதில்லை. கவும் அநாயாசமாகவே ஒலி எழுப்புகிறார். காலனி குரலின் பொறுமைப்படக்கூடிய ளவில் அவர் ரவைஜாதிகளை உதிர்க்கிறார். ந்த போதில், லாஸ் ஏன்ஜெல்ஸைச் ர்ந்த விக்டோரியா * மிகச் சிறப்பாகப் ரடுகையில் காட்டுகின்ற சாரீரத் தூய்மை ன் ஒளியை சுப்புலக்ஷ்மி அநாயாசமாக கவி த்திருப்பதைக் காண்கிறோம்.

தமக்குள்ளேயே அவர் ராகத்தின் நளினத் தயும், தாளத்தின் ஜொலிப்பையும் க்கியமாக்கிக் கொண்டிருக்கிறார். நேற்று டையறாத இருமணி நேர இசையின்போது ரீமதி சுப்புலக்ஷ்மி தமது பரந்த பாடாந்தரத் ன் 'மாதிரி'யாக ஒன்பது பாடல்களை அளித் ரர். 19-ம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட ங்கராசார்யம்' என்ற பாடலின் உணர்ச்சி ட்டும் சாஸ்திரீய நுட்பத்தைப் போலவே, 0-ம் நூற்றாண்டின் 'யாத் ஆவே' பாடலில் ரணப்பட்ட எளிய கவித்துவத்தாலும் ரன் கவரப்பட்டேன்.

''எம். எஸ்.'' என்ற எழுத்துக்கள் எதைக் றிக்கின்றன என்பதில் என்னைப் போலவே ங்களுக்கும் ஆவல் இருக்கும். 'எம்'என்பது வரது பிறந்த ஊராகிய மதராஸைக் றிக்கும். (மதுரையை மதராஸாக்கி விட் ரர் லோவன்ஸ்!) 'எஸ்' என்பது அவரது ாயும் முதல் குருவுமான ஷண்முக வடிவைக் றிக்கும். இந்தியாவில் அவரை அன்போடு ம். எஸ். என்று மட்டுமே அழைக்கிறார்கள்.

ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மியை இங்கு வரச் செய்த சமகாலக் கலைகள் நிறுவனத்துக்கும், இந்திய தூதராலயத்துக்கும் அமெரிக்காவின் தலைநகரமாகிய வாஷிங்டன் நன்றிக்கடன் பட்டுள்ளது. அவர் மீண்டும் மீண்டும் இங்கு வருவாராக! தமது மகோன்னதமான அந்தஸ்துக்குரிய வெற்றியை அமெரிக்கச் சுற்றுப்பயணத்தில் பெறுவாராக!

பிரபல தினசரியாகிய ''வாஷிங்டன் போஸ்ட்''டின் பால் ஹியூம் எழுதுகிறார்:

இந்தியாவில் இன்று ஜீவியவந்தர்களாக இருக்கும் பாடகர்களில் முதன்மை வகிப்பவர் ஓர் ஆகர்ஷணம் மிகுந்த பெண்மணி; எம். எஸ். சுப்புலக்ஷ்மி என்று பெயர்......

சுப்புலக்ஷ்மியின் சாரீரம் ஒலியின் ஒரு மெல்லிய நாணல். அவர் அசையாமல் அமர்ந்திருக்கும் போது எவ்வித முயற்சியும் இன்றி அது பொங்கி எழுகிறது. தம்புரா ரீங்காரமிடும் போது, மேற்கத்திய முறைக்கு முற்றிலும் மாறான வழியில் வயலின் அநு சரிக்கும் போது, அக்குரல் வர்ணிக்க இயலாத அதிஅற்புதமான நுணுக்க எல்லைக்குள் ஒரு மகத்தான சஞ்சாரத்தைச் செய்கிறது. நமது சங்கீதக் கலைஞர்களில் விஞ்ஞான ரீதியில் கணக்குகள் செய்யும் பெரும் விற்பன்னர் களுக்கும் விளங்காத முறையில் தாள மாத் திரைகள் புங்காநு புங்கமாகப் பகுக்கப்படு கின்றன! சுருதியின் நுண்ணிய சாயல் களும் கையாளப்படுகின்றன. கண்ணுக்குத் தெரியாத அலைகளாக அவை பொங்கிப் புரண்டு தணிகின்றன. இவற்றின் மீதாகவும், இவற்றினூடேயும் அலங்காரங்களும், நெளிவு சுளிவுகளும், மின்வெட்டுப் போன்ற சறுக்கல் களும் நம்மை வசியப்படுத்துகின்றன.....

பிரமிப்பூட்டும் விஸ்தாரத்திலும் சரி, வளைந்து கொடுக்கும் லளிதத்திலும் சரி, விறுவிறுப்பிலும் சரி அவரது பாடலை கரு ணிக்க முயல்வது இயலாத காரியம். நமது அநுபவத்தில் மட்டும் அவர் ஈடிணையற்றவர் அல்ல; அவரது தேசத்திலேயே ஈடிணையற்ற வராகத்தான் இருக்கிறார்.

அவருக்கு உதவி செய்தவர்கள் வயலின் வி.வி. சுப்பிரமணியமும் உடன் பாடிய ராதா விசுவநாதனும் ஆவர். ராதாவிசுவநாதனின் குரல் இரண்டாவது வயலின்போல், சுப்பு லக்ஷ்மியின் சாரீரத்துக்கு இழைந்து அழுத்திக் காட்டியது மட்டுமின்றி, அவ்வப்போது மேல் ஸ்தாயியிலும் ஒலித்தது. இது குறிப்பிட்டுப் பாராட்ட வேண்டிய அம்சம். சில சமயங் களில் இதனால் ஒரு மாயமந்திர சக்தியே உண்டாகி விட்டது.

* இவர்கள் மேல்நாட்டின் பெரும் கீர்த்தி வாய்ந்த ஜாடகரியர்.

# அவர் போனால்தானே....!



பெனிசிலின் கண்டு பிடித்த அலெக் ாண்டர் பிளமிங் லண்டனிலிருந்து பெல்பாஸ்ட்' நகருக்குச் செல்லவேண்டி ருந்தது. விமான நிலையத்துக்கு டிக்கட் வாங்கப் போன போது எல்லா டிக்கட் களும் ரிசர்வ் ஆகிவிட்டன என்று அறிவிக்கப்பட்டது. அரசாங்க சுகாதார இலாகா அதிகாரிகள் அனைவரும் பெல்பாஸ்ட் நகர் செல்லவேண்டியிருந்த தாலேயே இவ்வாறு ரிசர்வ் ஆகிவிட் டது என்று தெரிந்ததும், 'எல்லா அதி காரிகளும் ஏன் அங்கு போகிறார்கள்?' என்று பிளமிங் கேட்டார்.

'அங்கு அலெக்சாண்டர் பிளமிங் பேசப் போகிறார். அதைக் கேட்க அவர்கள் போகிறார்கள்' என்று பதி லளித்தார் அதிகாரி.

— மிதுனம்



# வெண்ணிலவுப் பெண்ணரசி

ஸ்ரீசோமு

அத்தியாயம் 7

## நெற்றித் திலகம்

திருமகளின் நாடு என்று சொல்லும்படியாகச் செல்வம் கொழித்த புன்னாட்டின் அரசியல் வாழ்விலே பெரியதோர் மாறுதல் ஏற்பட வேண்டிய காலம் வந்தது போலும்! அதற்கு ஒரு முன்னறிவிப்பாக இருந்தது அந்த எதிர்பாராத நிகழ்ச்சி.

அலெக்சாந்திரியாவுக்குத் திரும்பிச் சென்ற யவன வணிகன் கிளாடியஸ், இளவரசனிடம் ஒப்புக் கொண்டபடி மறுபடியும் தமிழகத்துக்கு வரும்போது அருமை மகள் டயானாவையும் தன்னுடன் அழைத்துக் கொண்டு வந்தான்! மாலவமன்னன் கேட்டுக் கொண்டபடியே 'யவன இருக்கை'யில் தங்காமல், புன்னாட்டு அரண்மனையின் விருந்தினர் மாளிகையிலேயே வந்து தங்கினான், தன் மகளோடு!

''நாகணவாய்ப் பறவை என்று சொன்னேனே, அந்தப் பறவை இதோ என்னுடன் வந்திருக்கிறது!''

இவ்வாறு மகளை இளவரசனுக்கு அறிமுகம் செய்தான் கிளாடியஸ்.

தந்தத்திலே கடைந்தெடுத்த அழகிய பாவைகள் பல புன்னாட்டு மாளிகையிலே உண்டு. ஆனால் அந்தத் தந்த உருவத்திலே மாணிக்கக் கற்களின் ஒளி இராது! அந்தத் தந்த உருவங்களுக்கு முத்துப் பற்கள் இல்லை. பாரசிக நாட்டு நறுமணச் செம்மலர்களைப் பதித்தது போன்ற இதழ்கள் அவற்றுக்கு ஏது? நாகவாணப்பறவைகளும் கிளிப் பிள்ளைகளும்போல அந்தத் தந்தப் பாவைகள் மொழிகளைக் கொஞ்சுமா? யவன நாட்டுப் பாவையாகிய இந்தத் தந்தக் கன்னியிடம் இத்தனை பண்புகளும் இருந்தனவே!

தங்கக் கூண்டுக்குள்ளே அடைபட்டுக் கிடந்த இளவரசப் பறவை, அந்த யவனப் பறவையின் மேனி அழகிலே சொக்கியது!

புன்னாட்டு விருந்தினர் மாளிகையிலே இரண்டு மூன்று நாட்கள் அழகின் மோன மயக்கிலே ஓசையில்லாமல் ஓடின! பிறகு?

பிறகு ஒரு நாள் சுற்றுலாச் சென்றார்கள். அழகும் தண்மையுமான மலைச் சாரல்! மயில்கள், மான்கள், பாடும் குயில்கள், பாடிக் கொண்டே ஓடிச் செல்லும் சிற்றோடைகள், முழவு வாசிக்

கும் அருவிகள், நறுமணம் கமழும் சோலைகள், வண்ண வண்ண மலர்களை உதிர்க்கும் பூம்பொழில்கள் — இப்படியாகக் கழிந்தது அன்று முழுவதும்! கிளாடியஸ், டயானா, இளவரசன், இரண்டொரு அரசப் பணியாளர்கள், பொன்வண்ணன் ஆகியோர் அடங்கிய சிறிய குழு அது!

மறுநாள், கோயில்கள், கலை மன்றங்கள், சிற்பக்கூடங்கள், உள்ளத்தில் அமுதத்தை வழங்கும் இசையரங்குகள் ஆகியவற்றுக்கு கிளாடியஸ், டயானா, புனல்வேணியன், பொன்வண்ணன் நால்வருமே சென்றார்கள்! வேறு அரசப் பணியாளர்கள் யாரும் இல்லை. சிறிய அன்பர் குழு மேலும் சிறிதாகக் குறுகியது. மேலும் அருகாக வந்தன இதயங்கள்! அடுத்த நாள், இலவந்திகை என்று அழைக்கப்படும் சோலை மாளிகையிலே கழித்தார்கள்! நிலவும், பூங்காற்றும், நறுமணம் கமழும் தாதகித் தேறலும், உவகை தரும் சிறிய விருந்தும்! கிளாடியஸ், டயானா, இளவரசன் மூவருமே இருந்தார்கள். பொன்வண்ணன் இல்லை. இதயங்கள் இன்னும் அருகிலே வந்து நின்றன!

இதற்கு மறுநாள் கிளாடியஸ் வாணிபக் கொள்வினைக்காகப் பொன்வண்ணனோடு பரதூருக்குச் செல்ல நேரிட்டது. அன்று மாலை அரச விருந்தினர் மாளிகையை அடுத்த பூஞ்சோலையிலே டயானாவும் இளவரசன் புனல்வேணியனும்! இருவருமே இருந்தார்கள். கிளாடியஸ் இல்லை.

தந்தை கிளாடியஸிடமிருந்து அடிப்படையான சில தமிழ்ச் சொற்களைக் கற்றிருந்தாள் டயானா! புனல்வேணியனும் பொன்வண்ணனிடமிருந்து யாரும் மெச்சக் கூடிய வகையில் மேற்கு மொழியைக் கற்றிருந்தான். என்றாலும் இருவரும், டயானாவும் புனல்வேணியனும் அதிகம் பேசவில்லை. வாய் திறந்து சொற்களைப் பரிமாறிக் கொள்ளவில்லை. ஆனால் நாழிகைக் கணக்காக இருவரும் உரையாடினார்கள்!

பரதூரிலிருந்து திரும்பிய கிளாடியஸ் மகளிடம் கேட்டான், ''நான் இல்லாமல் உனக்குப் பொழுதுபோயிருக்காதே!'' என்று.

''இளவரசரோடு அதிகம் பேசவில்லை. என்றாலும் பொழுது நிற்கவில்லை. நடந்தது. இல்லை, ஓடியது என்றே சொல்ல வேண்டும்!''

இவ்வாறு இதயக் களிப்போடு மறுமொழி சொன்னாள் டயானா!



ஆனைகள் பிடிக்கும் பெரு நிகழ்ச்சியைக் காணக் கிளாடியஸ், — டயானா இவர்களோடு இளவரசன் புனல்வேணியனும், ஒன்றாகச் செல்வதென்று முடிவாகி, மாலவ மன்னனும் இதற்கு ஒப்புதல் கொடுத்து விட்டான். விருந்தினர்மாளிகையிலோ டயானாவின் மொழியறிவு யாரும்வியக்கத்தக்க விதத்தில் முன்னேறியது. பல ஆண்டுகளாகத் தந்தை கிளாடியஸ் மிகுந்த முயற்சி எடுத்துச் சொல்லிக் கொடுத்த சொற்களையெல்லாம்விடப் பல புதிய சொற்கள், பற்பல சொற்கள், இரண்டு மூன்று நான்கு வாரங்களில் பாடம் ஆகிவிட்டன டயானாவுக்கு. வெறும் சொற்களா அவை? இல்லை! ஒவ்வொரு சொல்லிலும் ஓர் இதயம் ஒலித்தது. தவறு; இரண்டு இதயங்கள் ஒலித்தன என்று சொல்ல வேண்டும். இதயங்கள் இரண்டு என்றாலும், ஒலித்த ஒலி ஒன்றாகவே இருந்தது!

ஒரு நாள் மாலவமன்னர் அவசரமாகப் புனல்வேணியனைக் கூப்பிட்டார், தமது உட்புறத் தனி அறைக்கு!

'' மகனே! தமிழ் நாட்டிலேயே எல்லா அரசர்களும் பொறாமைப்படக் கூடிய அளவுக்குச் செல்வவளம் கொழிக்கும் நீலக்கல் சுரங்கத்துக்கு முதல்வன் நீ! உன் ஆட்சித் திறமையிலே ஒரு பெரிய அரசியல் எதிர்காலமே பின்னி நிற்கிறது. அந்த மாபெரும் பொறுப்பை மறந்து விடாதே!'' இவ்வாறு சொல்லி, இதற்குமேல் ஒன்றும் சொல்லாமல் அனுப்பினார் மகனை அங்கிருந்து!

அன்று கிளாடியஸ் தன் மகளிடம் தனியுரையாகச் சொன்னான்: ''மகளே! மேனாட்டு வாணிப உலகுக்கும் புன்னாட்டு நீலக் கல் சுரங்கத்துக்கும் இடையே, கடல் கடந்த ஒரு பெரிய அரசியல் உறவு பின்னி நிற்கிறது. பொறுப்பு வாய்ந்த ஒரு பெரிய வணிகனின் மகள் நீ! அந்தப் பெரிய பொறுப்பை நீ எப்போதுமே நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும் அம்மா!''

இவ்வாறு சொல்லி, இதற்கு மேல் ஒன்றும் சொல்லாமல், மௌனமாக இருந்து விட்டான் கிளாடியஸ்!

ஒரு வாரம் கழித்து ஒரு நாள் மாலவ மன்னனுடைய தனி அறையிலே பொன்வண்ணன் அரசனைக் கண்டு நெடு நேரம் பேசிக் கொண்டிருந்தான். அவன் சென்ற பிறகு மாலவன் இளவரசனை அழைத்தான். கண்கள் சிவந்திருந்தன மாலவமன்னனுக்கு!

''மகனே! இந்தப் புன்னாட்டின் வருங்கால மன்னவன் நீ! உன்னுடைய செயல்கள், உன்னுடைய சொற்கள், உனது நடத்தை எல்லாமே, இந்த அரசச் சுற்றத்தார் அனைவரின் தணிக்கைக்கும் உள்ளானவை. இதை நீ மறந்தால் இந்த நாட்டின் எதிர்காலத்தையே அது சீர்குலைத்துவிடும்! புரிகிறதா ?''

இவ்வாறு கடுமையாகக் கேட்டு விட்டு அதற்கு மேல் ஏதும் பேசாமல் அறையிலிருந்து எழுந்து சென்று விட்டான் தந்தை !

அன்று மாலை பொன்வண்ணன் கிளாடியஸைக் கண்டு பேசினான். இருவரும் நீண்ட நேரம் உரையாடினார்கள் ! பொன்வண்ணன் சென்ற பிறகு, கிளாடியஸ் மகள் இருந்த அறைக்கு வேகமாக வந்தான். முகத்தில் கவலை சூழ்ந்திருந்தது.

''கண்ணே, சொல்லாமலேயே எல்லாம் புரிந்து கொள்கிற ஆற்றல் உள்ளவள் நீ! உன்னிடம் நான் என்ன சொல்லுவேன்! உதயமும் பகலும் அந்தியும் இளவரசனோடு அப்படி என்ன பேசுகிறாய் நீ? சொல்லிலும், செயலிலும், நான்குபுறமும் கோடுகள் போட்டு வரையறை செய்கிற நாடு இது. புன்னாட்டின் தலைநகரமாகிய இந்தக் கட்டூர், நம்முடைய அலெக்சாந்திரியாப் பட்டினம் இல்லை!''

டயானாவின் செவிகளில் இந்த மொழிகள் விழுந்த மறுவினாடி அந்தத் தந்த உருவத்தின் பளிங்கு முகத்திலே உதிரம் தெளித்தது போல ஒரு அலரிச் சிவப்பு படர்ந்தது. அவள் எதுவும் மறுமொழி பேசாமல் அந்த அறையை விட்டு அகன்றாள்!

ஃ ஃ ஃ



புன்னாட்டு அரசச் சுற்றத்தினரிடையே ''அலர்'' என்று சொல்லுகிற வம்புப் பேச்சு, நன்கு பரவ ஆரம்பித்தது. இளவரசன் புனல்வேணியனும் யவன வணிகன் கிளாடியஸின் மகள் டயானாவும், ஒருவரையொருவர் காதலிக்கிறார்கள் என்றும், பெற்றோர்களால் இந்த இரண்டு இளம் உள்ளங்களையும் கட்டுப்படுத்த முடியவில்லை என்றும், முதியவர்களும் இளைஞர்களும் பேசிக் கொண்டார்கள். பெண்டிர்களிடையே நடந்த பேச்சும், ஆடவர்களிடையே நடைபெற்ற ஆராய்ச்சியும், அரண்மனைக்கு வெளியேயும் பரவி, அம்பலங்களிலும் மன்றங்களிலும் பலரும் இதன் எதிர்கால விளைவுகளைப் பற்றிக் கவலையோடு சிந்திக்க ஆரம்பித்தார்கள்! மாலவமன்னனுக்கும் இது தெரிந்தது. கிளாடியஸுக்கோ இது எல்லையற்ற துயரத்தைத் தந்தது!

மகனிடம் எப்படிப் பேசுவது, என்ன சொல்லி இதை எவ்வாறு தடுப்பது என்று கடுமையாக இரவும் பகலும் சிந்தனை செய்தான் மாலவன்.

மகளிடம் எப்படிப் பேசுவது, என்ன முறையில் எங்ஙனம் சொல்லி இதைத் தடுத்து நிறுத்துவது என்று ஆழ்ந்த கவலையோடு அறுபது நாழிகையும் சிந்தனை செய்தான் கிளாடியஸ்.

இவற்றில் எதையும் பற்றிச் சிந்திக்காமல், எதையும் பொருட்படுத்தாமல் சிறகடித்துப் பறக்கும் நாகணவாய்ப் பறவைகளைப் போல, எட்டுத் திசையும் பதினாறு கோணமும் இதய இறகுகளைப் பரப்பி, வானவெளியிலே பறந்தார்கள், புனல்வேணியனும் யவன அழகி டயானாவும் !

ஆனை பிடிக்கும் பெருநிகழ்ச்சிக்குரிய நன்னாள் விரைந்து கொண்டிருந்தது. கிளாடியஸ் டயானாவைக் கூப்பிட்டுத் தனியாக இரண்டொரு பேச்சுக்கள் சொல்ல முனைந்தான்.

''மகளே! மலைநாட்டிலே ஆனை பிடிக்கும் பெருநிகழ்ச்சியைப் பார்க்க வேண்டும் என்பதற்காகவே முக்கியமாக உன்னை இங்கே இந்த நாட்டுக்கு அழைத்து வந்தேன். ஆனால் இப்போது என் மனம் முற்றிலும் மாறிவிட்டது. ''அலர்'' என்ற வசைமொழி மலைகளைக் கடந்து பரவுவதற்கு முன்னால் நாம் இருவரும் மரக்கலத்தில் ஏறி விட வேண்டும்!''

இவ்வாறு சொன்னான் கிளாடியஸ். மகள் எதுவும் மறுமொழி சொல்லி, எதிர்மொழி பேசுவாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. எதைத்தான் அவன் எதிர்பார்த்தான்? டயானா 'பளீர்' என்று பேசினாள்:

''எதற்காக நாம் அப்படி அச்சப்பட்டுக் கொண்டு மரக்கலத்திலே ஏற வேண்டும் என்று புரியவில்லையே, எனக்கு!'' இதைக் கேட்டதும் கிளாடியஸ் வெளியே சென்றான். சில விநாடிகளில் மீண்டும் அந்த அறைக்குள்ளே வந்தான்.

''டயானா, என்னுடைய பாசம் நிறைந்த இதயத்தில் சீற்றத்தின் வெறியை மூட்டாதே. உன்னை இங்கே அழைத்து வருவதாக இந்த அரண்மனையில் எத்தனை மனமகிழ்ச்சியோடு

சொல்லிப் போனேனே, அத்தனை மகிழ்ச்சிக்கும் நேர்மாறாகத் துயரமும் அவமானமும் அடைகிறேன் நான். வாணிபம் செய்ய வந்த இடத்தில் இவ்வளவு நிகழும்படி செய்கிறாய் நீ! புரிகிறதா? புரிகிறதா உனக்கு?''

''புரிகிறது நீங்கள் சொல்வது! ஆனால் துயரம், அவமானம் என்றெல்லாம் சொல்கிறீர்களே, அதுதான் புரியவில்லை அப்பா எனக்கு! மனிதர்களுக்குள் ஒருவரை யொருவர் நேசிப்பது தவறா? ஒத்த குணமும், ஒத்த நலமும், ஒத்த இயல்புகளும் உள்ள ஒருவனும் ஒருத்தியும் தங்களுக்குள் அன்பு செலுத்துவதும், ஒருவரைஒருவர் புரிந்து கொண்டு ஒருவருக்கொருவர் உடைமை ஆவதும் அவமானமா? இது தவறா? எனக்குப் புரியவில்லையே, நீங்கள் சொல்வது!''

''புரியவில்லையா உனக்கு? புரியவில்லையா உனக்கு?''

இவ்வாறு கேட்டுக் கொண்டே அங்கியினுள் செருகி வைத்திருந்த சாட்டைக் கயிற்றை வெளியே உருவினான் கிளாடியஸ். தமிழகத்து அரண்மனைகளிலே அராபியப் புரவிகளை அடக்குவதற்காகத் தமிழ் வீரர்கள் கையாளும் அந்தக் கொடிய சாட்டையைக் காற்றிலே ஒரு சுழற்றுச் சுழற்றினான். ''இப்பொழுது புரிகிறதா பார். புரிகிறதா பார்!'' என்று சொல்லிக் கொண்டே பாய்ந்தான். ''பளார்'' என்று கடும் ஓசையோடு டயானாவின் மெல்லிய இடையிலே அந்தச் சாட்டை நெளிந்தது. 'வீல்' என்ற கூச்சல் ஒலியிலே ''அப்பா'' என்று கதறினாள் டயானா! அடுத்த விநாடி மீண்டும் அடுத்த வீச்சுக்காகக் காற்றிலே சுழன்றது அந்தக் கொடிய சாட்டை!

''நிறுத்துங்கள்!'' என்று ஓசை கேட்டது. ''நிறுத்துங்கள் கிளாடியஸ்!'' என்று கூச்சல் இட்டு அதட்டியவண்ணம் அறைக் கதவுகளை ஓங்கி விலக்கிக் கொண்டு உள்ளே பாய்ந்தான் புனல் வேணியன்!

வேகமாகக் காற்றிலே சுழன்ற அந்தச் சாட்டையைத் தனது வலது கையை வீசிப் பற்றிப் பிடித்தான் இளவரசன்.

''கிளாடியஸ்! இந்த விநாடியிலிருந்து டயானாவைத் தொடுவதற்கு உம்முடைய சாட்டைக்கு உரிமையில்லை. என் சொல்லையும் மீறி அந்தச் சாட்டை அவளைக் குறி பார்க்குமானால் இதோ இந்த வாளுக்கு அது எதிர் பேசியாக வேண்டும்!''

இடையிலே செருகியிருந்த உறை யிலிருந்து வாளை உருவினான் புன வேணியன்! டயானாவுக்கும் அ ளுடைய தந்தைக்கும் நடுவிலே நின் கொண்டான் இளவரசன்!

ஃ ஃ ஃ



ஆனை பிடிக்கும் கானக நிகழ்ச்சிக்குப் பின்னாட்டு அரண்மனையிலிருந்து யாருமே போகவில்லை! அதற்கு மாறாக இந்தச் சிற்ற நிகழ்ச்சி நடந்த அன்றைக்கு இரவ விருந்தினர் மாளிகையிலிருந்து வெ யேறினான் கிளாடியஸ்! யாரிடமு எதுவும் சொல்லிக்கொள்ளவில்லை. எ ரிடமும் எதுவும் பேசவில்லை. உள்ள நெருப்பிலே வெந்தது. யவனர்களுக் உரிய மாபெரும் தன்மான உணர்வி பிறந்து உருவாகி நின்ற பெருமக கிளாடியஸ்!

ஆம்; அந்த விநாடியிலிருந்து அவ மகளிடம்கூட ஒரு சொல் பேசவில் மௌனமாக இருந்தான். மௌனமா நடந்தான். மௌனமாகவே வெ யேறினான்.

சென்ற முறை அவன் முசிறி லிருந்து புறப்பட்ட போது எத்தனை வ யனுப்புச் சடங்குகள்! முசிறித் து முகத்திலேதான் பொன்வண்ணன் அ ளிடம் என்னென்ன ஆசை மொழிக யெல்லாம் சொன்னான்! ஆனால் இன்

முசிறித் துறைமுகத்திலிருந்து எ பாராதவிதமாக, எதிர்பாராத சூ நிலையில், எதிர்பாராத ஒரு துயர தனிமையிலே, அலெக்சாந்திரியா குப் புறப்பட்டான் கிளாடியஸ், தன மகளையும், தன் இதயத்தையும், த னுடைய ஆசைகள், கனவுகள் அ தனையையும் அப்படியே உதறிவிட்டு!

கூனிக் குறுகிக் குமைந்து அவ மரக்கலத்திலே ஏறும்போது மீண்டு அதே வானவில் வளைந்தது. இந்த முை அதற்கு வணக்கம் செலுத்தும் போ அவன் இறுதியாக விடைபெறுபவ போல இரண்டு கைகளையும் கூப்பிக் க கலங்கி இதயம் விம்மிப் பொருமின

ஆம்; கிளாடியஸ் இதன் பிற தமிழ் நாட்டுக்குத் திரும்பி வரவில் அலெக்சாந்திரியாவுக்குச் சென்ற சி நாட்களில் எல்லாம் இதய நோ கண்டு மடிந்தான். அலெக்சாந்தி யாப் பட்டினத்தின் ஈடுஇணையற் வணிகனாகிய அந்த யவனப் பெ

மகனே, அந்தப் பட்டினத்தின் புகழ் பெற்ற "வெண்ணிலவுக் கோவிலி"ன் அருகிலே உள்ள "சுக்கிரன் ஏரி" என்ற பெரிய பொய்கையின் கரையிலே, அடக்கம் செய்து, அந்த இடத்தில் மிகப் பெரியதொரு கல்லறை எழுப்பினான், கிளாடியஸின் மகன் இளம் கிளாடியஸ்!

இங்கோ — தமிழ் நாட்டிலோ என்றால், இளவரசனுக்கும் டயானாவுக்கும் ஏற்பட்ட உறவானது, அரசச் சுற்றத்திலே பெரிய குழப்பத்தை உண்டாக்கியது. என்றாலும், மாலவமன்னன் தனக்கு இயல்பாக ஏற்பட்டிருந்த அரசியல் முதிர்ச்சி காரணமாகவும், அமைச்சர்களின் நுட்பமான கருத்துரை காரணமாகவும், சீற்றத்தை அடக்கிக் கொண்டு, தன்னுடைய பட்டத்து இளவரசனிடம் ஒரு வேண்டுகோள் மட்டும் செய்து கொண்டான்:

"ஒரு நாட்டை ஆளுகிற மன்னனின் வாழ்விலே ஏற்படுகிற காதல் அநுபவத்துக்கும், ஒரு சாதாரண மகனுடைய காதலுக்கும் பெரியதோர் வேறுபாடு உண்டு. ஒரு வேந்தனுடைய உணர்ச்சிகளிலே ஒரு பெரிய நாட்டின் உணர்ச்சிகள் அத்தனையும் பின்னிப் பிணைந்துள்ளன. இந்த உண்மையை மறவாமல் ஒவ்வொரு விநாடியும் நினைவிலே வைத்துக் கொள், மகனே! அரசியல் மரபுகள் நிறைந்த தமிழ் நாடு உனது புன்னாடு!"

இந்த வேண்டுகோளின் நுட்பத்தைப் புரிந்து கொண்டான் இளவரசன். டயானாவோ புரிந்து கொண்டதோடு இல்லை; ஒப்புக் கொள்ளவும் செய்தாள் அந்த உத்தம யவன மாதரசி! அவளுக்கு என்றே யவன முறைப்படி ஒரு பெரிய அரச இல்லம் கட்டினான் புனல்வேணியன். கிரேக்கச் சிற்பங்களையும், யவனக் கலைப் பொருள்களையும் கொண்டு, அந்த அரண்மனையை அழகு செய்தான். டயானாவோ தமிழ் நாட்டுச் சீலங்களும் கிரேக்க நாட்டுப் பண்புகளும் இணைந்த உத்தமியாக அரசச் சுற்றத்தினரின் அன்பைக் கவர்ந்தாள். மாலவமன்னனுக்குப் பிறகு பட்டம் சூடிக் கொண்ட போது, குறுநில மன்னன் ஒருவனுடைய மகளைப் பட்டத்தரசியாக மணந்து கொண்ட போதிலும், தந்தையின் வேண்டுகோளை நிறைவேற்றுவதில் காட்டிய ஊக்கத்தை டயானாவின் நல்வாழ்விலும் சரிசமமாக வழங்கினான் புனல் வேணியன்! யவன வாணிபமும் நில்லாமல் முறியாமல் தொடர்ந்து நடைபெற்று வந்தது. இந்த வாணிபத் தொடர்பு மேலும் மேலும் வளர்வதற்கு டயானாவின் ஆற்றலும், அவளுடைய நல்லுறவும் துணை செய்தன என்று, புன்னாட்டு அரசியல் அறிஞர்கள் எல்லாரும் அந்த யவன அரசியைப் புகழ்ந்து பேச ஆரம்பித்தார்கள்!

மார்க்டுவேயின் போலவே டி.கே.சி.க்கும் பள்ளிக்கூடங்களைப் பற்றி நல்ல அபிப்பிராயம் கிடையாது என்பது நமக்குத் தெரியும். மார்க் டுவெயின் ஒருமுறை பின்வருமாறு குறிப்பிட்டார் என்று சமீபத்திய 'ஹிம்மத்' இதழ் ஒன்று கூறுகிறது:

"என்னுடைய கல்வி முன்னேற்றத்துக்கு இடையூறாக நிற்கப் பள்ளிக்கூடங்களை நான் அனுமதித்ததில்லை."

— தகவல்: வி. ந. ஸ்ரீதரன்

ஃ ஃ ஃ



"அதிர்ச்சியிலும் துயரத்திலும் தன்னுடைய காதல் வாழ்வைத் தொடங்கிய இந்த யவனப் பெண்ணரசி நாளாகநாளாகப் பலருடைய பாராட்டையும் ஆழ்ந்த அன்பையுமே பெற்று, பிறந்த நாட்டின் புகழையும், புகுந்த நாட்டின் பெருமையையும் ஒன்றாக இணைத்து வாழ்ந்தாள். அப்படிப்பட்ட உத்தமிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது!" என்றுசொன்னாள் நீலவல்லி.

"அப்படியா?" என்று உவகையோடு கேட்டான் வெள்ளைத் திவின் படிக்கட்டிலே அமர்ந்திருந்த வேலவன் கோதை!

"வெண்ணிலவு பொழியும் முழு நிலா இரவிலே பிறந்த அந்தப் பெண் குழந்தையைப் பட்டத்துக்குரிய இளவரசியைப் போல் மதித்துச் சீராட்டி எல்லையற்ற அன்போடு வளர்த்தார்கள். அது மட்டுமில்லை. காதணி விழாவிலே புன்னாட்டு அரச மரபுப்படி அந்தப் பெண் குழந்தைக்கு நெற்றியிலே முழு நிலவு வட்டத்திலே ஒரு நீலத் திலகத்தையும், பச்சை குத்தினார்கள்...."

இவ்வாறு சொல்லிச் சாக்கியப் பள்ளியின் படிக்கட்டிலிருந்து எழுந்து, வெண்ணிலவு பொழியும் பாறையிலே வந்து நின்றாள் நீலவல்லி! அந்தப் பகல் மயமான நிலவின் ஒளியிலே,—வேலவன் கோதை நீலவல்லியின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். அந்த அழகுக் கன்னியின் நெற்றி மையத்திலே அழகானதொரு பக நீலத் திலகம் நிலாக் கீற்றிலே மின்னியது! (தொடரும்)

# பூரணமான இருமல் கட்டுப்பாட்டுக்கு




# க்ளைகோடின்

## டெர்ப் வசாகா

க்ளைகோடினுடைய மருத்துவ அங்கீகாரம் பெற்ற பார்முலா, இருமலால் பாதிக்கப்பட்ட பல இடங்களிலிருந்தும் இருமலை விரட்டியடித்துவிடுகிறது. க்ளைகோடினின் செயல் திறன்: ● மூளையில்—க்ளைகோடின், தன்னியல்பாக வரும் இருமலைத் தூண்டும் இருமல் கேந்திரத்தை சரியான சமயத்தில் பத்திரமாகவும், பயனுள்ள முறையிலும் கட்டுப்படுத்துகிறது ● தொண்டையில்—க்ளைகோடின் அடைப்பை அகற்றி எரிச்சலையும் வலியையும் ஆசுவாசப்படுத்தி, தொண்டையின் மென்மையான பகுதிகளை, கிருமிகள் பாதிக்காமல் பத்திரமாகப் பாதுகாக்கிறது ● மார்பில்—க்ளைகோடின், சுவாசக் குழாய்கள் மற்றும் மார்பின் இறுகிய தசைகளைத் தளர்த்தி, கஷ்டமின்றி சுவாசிக்க உதவுகிறது ● நுரையீரல்களில்—மூச்சுத் திணறவைக்கும் சளியைக் கரைத்து, 'ஆழப் படிந்த' சளியை அகற்றி, அடைப்பை நீக்குகிறது.

எப்பொழுதும் க்ளைகோடின் கைவசம் இருக்கட்டும்.



**க்ளைகோடின்—30 வருடங்களுக்கு மேலாக மிகவும் அதிகமாக விற்பனையாகும் கைகண்ட வீட்டுநிவாரணி**

4 அளவுகளில் கிடைக்கிறது • அலெம்பிக் தயாரிப்பு Alembic

everest/363 i/Acw tm

# செம்மீன்

அகில இந்தியப் புகழ்தேடிய நாவல், இந்தியாவின் தலைசிறந்த திரைப்படக் கலைஞர்களின் கூட்டுறவு, இருமுறை தனது படங்களுக்காக (நீலக் குயில், முடியனுய புத்திரன்) வெள்ளிப் பதக்கம் பரிசு வாங்கிய டைரக்டர் இத்தனையுமாகச் சேர்ந்து தென்னிந்தியாவுக்கு முதன் முதலாக ஒரு தங்கப் பதக்கத்தைத் தேடித் தந்திருக்கிறது.

ஒரு தோணியும், வலையும் வாங்குவதையே இலட்சியமாகக் கொண்டு வாழ்கிறான் செம்பன்குஞ்சு. அவனது லட்சியத்தைக் கறுத்தம்மாவின் அன்புக்காக வேண்டிமட்டும் நிறைவேற்றி வைக்கிறான் முஸ்லீம் வாலிபனும், மீன் வியாபாரியுமான பரீக்குட்டி. தன் வியாபாரத்தின் மூலதனத்தையே செம்பன்குஞ்சுவுக்குக் கொடுத்து உதவுகிறான் அவன். சொந்தத் தோணியும், வலையுமாகக் கடலில் சென்று தோணி நிறைய மீனுமாகத் திரும்புகிற செம்பன் முதல் நாளிலேயே நன்றி மறக்கிறான்—'ரொக்கப் பணம் இல்லாவிட்டால் மீன் தர முடியாது' என்று சொல்லி விடுகிறான். இந்த நிகழ்ச்சி இரண்டு பெரிய மாற்றங்களுக்குக் காரணமாகிறது. ஒன்று பரீக்குட்டியின் வியாபார வீழ்ச்சி. இரண்டாவது மாற்றம் கறுத்தம்மா, அவனைத் தன் இதய பீடத்தில் ஏற்றி வைக்கிறாள். தன் தந்தையின் பணத்தாசைக்கு இரையான வாலிபனுக்காக அவள் படுகிற வேதனையிலும் இரக்கத்திலும் பிறக்கிறது காதல்!

பின்னால் கறுத்தம்மா தான் பிறந்த துறையை விட்டு மணமாகிக் கணவன் பழனி வீட்டுக்குப் போகிறாள். கடலில் மீன் பிடிக்கச் செல்கிறான் பழனி. ஒரு நாள், பிரிவைப் பொறுக்க முடியாத நிலையில் பரீக்குட்டி அவளை நாடி வருகிறான்.

'அரையத்தி நெறி பிறழ்ந்தால் அவளது அரையனை கடல் கொள்ளும், கடல் துறையைக் கடலம்மை அழித்து விடுவாள்' என்ற அந்தச் சமூகத்தில் வேரோடிப் போன நம்பிக்கை கறுத்தம்மா — பழனி வாழ்க்கையில் அப்படியே சம்பவிக்கிறது.

நாவலைப் படிக்கையிலேயே நம்மைக் கவருகிறவர்கள் — நம் நெஞ்சில் நிலைத்து விடுகிறவர்கள் கறுத்தம்மா, செம்பன் குஞ்சு, சக்கி, பரீக்குட்டி, பழனி என்பவர்கள்தான். இவர்கள்தான் நாவலின் முக்கிய பாத்திரங்களும்கூட. இவைகளை முறையே ஷீலா, கொட்டாரக்கரை ஸ்ரீதரன் நாயர், அடூர் பவானி, மது, சத்யன் இவர்கள் ஏற்றிருக்கிறார்கள். நடிப்பில் முதலிடத்தைக் கொட்டாரக் கரையும், சத்தியனும் தட்டிக் கொண்டு போகிறார்கள். முன்னவரின் ஆழ்ந்த நடிப்பும், பின்னவரின் அநாயாசமான நடிப்பும் ஒன்றுக்கொன்று சளைக்கவில்லை. இரண்டாவது இடத்தைப் பெறுகிறவர்கள் ஷீலாவும் மதுவும்.

டைரக்ஷனைப் போலவே 'போட்டோகிராபி'யும், 'எடிட்டிங்'கும் ஈஸ்ட்மன் கலரும் இப்படத்தை ஒரு மகத்தான வெற்றிப் படமாக ஆக்கித் தந்திருக்கின்றன. நாவலிலிருந்து எள்ளளவும் விலகாமல் வசனம் அமைத்திருக்கிறார் எஸ். எல். புரம் சதானந்தன்.

இசையமைப்பு (சலில் சௌத்ரி) பெரும் வெற்றியாக அமையாவிடினும், வயலார் ராமவர்மாவின் கருத்துள்ள பாடல்கள் இசையமைப்பைச் சோபிக்கச் செய்கின்றன.

தகழியின் 'செம்மீன்' என்ற நாவல் இந்தியா முழுவதிலும், பிறநாடுகளிலும்கூடப் புகழ் பெற்றிருப்பதற்குக் காரணம் அது இந்தியாவின் கோடிக்கணக்கான மக்களுக்கிடையில், ஒரு சிறு சமூகத்தை, அதன் ஜீவனை—பிரதிபலிக்கிறது என்பதால்தான்.

படத்தைப் பார்த்துவிட்டு வெளியே வருகிறபோது கறுத்தம்மா, பழனி, பரீக்குட்டி இவர்களுக்காக இரண்டு துளி சோகக் கண்ணீருடன், ராமுக்காரியாட் (டைரக்டர்), பாபு (தயாரிப்பாளர்), மார்கஸ் பார்ட்லி (ஒளிப்பதிவு) இவர்களை வாழ்த்துகிற பாவனையில் இரண்டு துளி ஆனந்தக் கண்ணீரையும் சிந்துகிறோம்.

— வை. ரங்காநாதன்



அட்டைப் படக் கதை

# பட்டு ரவிக்கை

எஸ். பத்மாவதி

''ஜானு.... ஜானு....!''

''என்ன வேணும்? நான் இங்கேதானே இருக்கேன்!''

''ஒண்ணும் வேண்டாம். இன்னிக்குத் தானே சரஸ்வதி பூஜை?''

''ஆமாம். நீங்கள் ஜுரமாய்ப் படுத்து பிள்ளையாட்டுப் போல இருபது நாட்களாச்சு. அம்பாள் கிருபையினுலே சீக்கிரம் குணமாகணும். இந்த நவராத்திரி பத்து நாட்களும் என் ஜபம் இதுதான்.''

''ஜானு! நான் சொல்றதைக் கேட்பயா?''

''ஏன் இப்படிக் கேட்கிறீங்க?''

''இல்லே ஜானு! டாக்டர் 'டைபாயிட்' ஜுரம்னு சொல்லி ஒரு வாரம்தான் ஆச்சு. இன்னும் இருபது முப்பது நாட்களுக்கு நான் படுக்கையிலிருந்து எழக்கூடாது. அழாதே, ஜானு! இப்போதெல்லாம் 'டைபாயிட்' ஜுரத்துக்கு நல்ல வைத்தியம் கண்டுபிடிச்சாச்சு. முன்போலப் பயமே இல்லே. இந்த இருபது நாட்களா நீ கண் விழித்து இப்படியே உட்கார்ந்திருக்கே. உன் உடம்பு என்ன ஆறது? கொஞ்ச நேரம் வெளியே போய் விட்டு வாயேன். டிரைவரைக் கார் எடுக்கச் சொல்லு.''

''நீங்க சும்மா இருங்க. நான் வெளியில் போனாலும் என் மனசு நிம்மதியா யிருக்குமா? அப்படி என்ன கஷ்டம் எனக்கு இங்கே? கூப்பிட்ட குரலுக்கு ஓடி வர நிறைய ஆட்கள். உங்களைக் கவனிக்கக் நர்ஸ் வேறே டாக்டர் போட்டுட்டார். மேற்பார்வை பார்க்கிறதுகூட ஒரு சிரமமா?''

''அதுக்கில்லே, ஜானு! இந்தப் பண்டிகை நாள் முழுதும் நீ விதம் விதமாகப் புடவை, நகை அணிந்து பல வீடுகளுக்குச் சென்று வருவாயே! என்னால்தானே இப்படி உட்கார்ந்திருக்கிறாய்? இந்தா, நவராத்திரிக்கென்று ஆசையாக வாங்கி வைத்திருக்கும் புடவை... இல்லே, ஜானு! மறுக்காதே! இன்று வெள்ளிக்கிழமை – சரஸ்வதி பூஜை. பிரித்துக் கட்டிக் கொள்ளேன்.''

ஜானகி பெருமூச்செறிந்தாள். ''ஏதோ உங்கள் திருப்திக்காகக் கட்டிக் கொள்கிறேன்.''

''கட்டிண்டு சப் ஜட்ஜ் சம்சாரம் வீட்டில் சரஸ்வதி பூஜையை முன்னிட்டு ஒரு தேநீர் விருந்துக்கு அழைத்திருக்கிறாள் என்று சொன்னாயே! அங்கே போய்ச் சிறிது நேரம் உங்கள் 'க்ளப்' அங்கத்தினர்களுடன் பேசிவிட்டு வாயேன். சிறிது மனமாற்றமாக இருக்கும்.''

''ஆமாம். ஜட்ஜ் சம்சாரமான பிறகு தானே எல்லாருக்கும் கண்ணில்படுகிறது. இப்போ எல்லோரும் வருந்தி வருந்தித்தான் கூப்பிடுவார்கள். கூப்பிட்ட இடத்துக்கு உடனே போயிடலாமா?''

''ஐயோ, ஜானு! உனக்கு இந்தப் பெருமை எப்போதான் போகுமோ!''

''எதுக்குப் போகணும்? ஜட்ஜ் பெண்டாட்டி, ஜட்ஜ் பெண்டாட்டிதான். சப்–ஜட்ஜ் பெண்டாட்டி, சப்ஜட்ஜ் பெண்டாட்டிதான். இந்தப் பெருமையை நான் ஏன் விட்டுக் கொடுக்கணும்? வரச் சௌகரியப் படாதென்று போன் மூலம் செய்தி அனுப்பினால் போதும்!''

''வேண்டாம், ஜானு! முன்னமே க்ளப்பிலே எல்லோரும் உன்னைக் கர்வக்காரின்னு மறைமுகமாகப் பேசுவதாகச் சொன்னாய். காலையிலிருந்து மூன்று தடவை 'போன்' செய்து கூப்பிட்ட பிறகும் நீ போகாவிட்டால் நன்றாக இருக்காது. நீ போனால் சப்–ஜட்ஜ் ராமாமிருதத்துக்கும் பெருமையாக இருக்கும். நல்ல மனிதர்!''

''நீங்கள் அதிகம் பேசி அலட்டிக் கொள்ளாதீர்கள். நீங்க சொல்றதுக்காகப் போறேன்.''

ஜட்ஜ் ஜம்புநாதன் தமக்குள் மெதுவாகச் சிரித்தபடி படுக்கையில் புரண்டு படுத்தார். 'ஜானு ரொம்பத்தான் மாறிவிட்டாள்.' சிந்தனையின் ஓட்டத்தில் கண்களை மூடிக் கொண்டார்.

ஜம்புநாதன் கஷ்டப்பட்டுப் படித்து முன்னுக்கு வந்தவர். இன்று அவர் வகிக்கும் ஜட்ஜ் பதவி, அவர் உழைப்பு அவருக்கு அளித்த பரிசு. ஜானகியும் ஏழைக் குடும்பத்தில் பிறந்து, வளர்ந்து வாழ்க்கைப்பட்ட இடத்திலும் வறுமையை அநுபவித்தவள் தான்.

இன்று அவள் பணத்தில் மிதக்கிறாள். எல்லாம் ஜம்புநாதன் வக்கீல் தொழிலில் பிரபலமடைந்து சுயமாகச் சம்பாதித்தவை.

வறுமையை யௌவனத்தில் அநுபவித்து அதனால் ஏற்பட்ட ஏமாற்றங்களா, அவளை வறுமையைக் கண்டால் வெறுக்கும்படி செய்து விட்டன? ஜானு தன் பழைய நிலையை முற்றும் மறந்தவள் போலக் காணப்பட்டாள். தன்னுடைய பழைய நேசிதிகளை அவள் அடியோடு துண்டித்து விட்டாள். அதன் காரணமாகப் 'புதுப் பணக்காரி' 'கர்வக்காரி' என்று பட்டப் பெயர்களையும் சம்பாதித்துக் கொண்டாள். மொத்தத்தில் வறுமையின் சின்னமே தன் மேல் படாதவாறு துடைத்து விட்டாள்.

ஜம்புநாதன் குணத்தில் அன்று போல் இன்றும் இருந்தார். வெறும் ஜம்பு இன்று ஜட்ஜ் ஜம்புநாதன். பதவியில் மாற்றமும் பணத்தில் ஏற்றமும் அவரைச் சிறிதும் மாற்ற முடியவில்லை. ஜானகியின் மாற்றம் அவருக்குத் தெரிந்திருந்தும் அவரால் அவளைத் திருத்த முடியவில்லை.

அரை மணி நேரத்துக்குப் பிறகு ஜானகி தன் புதுப் புடவையைப் பிரித்துக் கட்டிக் கொண்டு கணவரிடம் விடைபெற்றுக் கொண்டு காரில் கிளம்பினாள்.

''வாருங்கள்! வாருங்கள்! எங்கே வராமல் இருந்து விடுவீர்களோ என்று எண்ணிக் கொண்டிருந்தேன்.'' சப் ஜட்ஜின் மனைவி ஸ்ரீமதி லலிதா ராமாமிருதம் முகம் மலர வரவேற்றாள்.

ஜட்ஜ் பதவி காலியான போது லலிதா தன் கணவருக்கே அந்தப் பதவி கிட்டும்

என்று வெளிப்படையாகப் பேசியவள். ஜம்புநாதன் அப்பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட போது தன் அருவையைப் பலவிதத்தில் வெளிப்படுத்தியவள். அதெல்லாம் பழைய கதை. இப்பொழுது ஜானகியும் லலிதாவும் நெருங்கிய சிநேகிதிகள்.

சப்–ஜட்ஜ் ராமாமிருதத்தின் பங்களா மின்சார விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. நடு ஹாலில் ஓர் ஆள் உயரத்துக்கு ஒரு பெரிய சரஸ்வதி பொம்மை. ஆகா! அந்தப் பொம்மை வைக்கப்பட்டிருந்த மண்டபத்தின் அமைப்புத்தான் எவ்வளவு கவர்ச்சியாயிருக்கிறது!

சினிமா ஸ்டுடியோ ஆட்கள் வந்து அலங்கரித்துக் கொடுத்ததாகவும் அதற்கு மிகவும் செலவாயிற்று என்றும், ஸ்ரீமதி லலிதா ராமாமிருதம் வாய் ஓயாமல் எல்லோரிடமிடமும் சொல்லிக் கொண்டிருந்தாள்.

மண்டபத்தின் முன் பெரிய இரு வெள்ளிக் குத்து விளக்குகள் வைக்கப்பட்டிருந்தன. ஐந்து முகங்களிலும், எண்ணெய், திரி கட்டுக்குப் பதில், அழகிய சிறு மின்சார பல்புகள் பிரகாசித்தன.

சிறிது நேரத்தில் அந்தக் கூடம் விதம் விதமான நகைகளும், பட்டாடைகளும் அணிந்த நாரீமணிகளால் நிரம்பி விட்டது. அனைவரும் அந்தப் பேட்டையிலுள்ள லேடீஸ் கிளப்பின் அங்கத்தினர்கள். எல்லாரும் பணம் படைத்த பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்.

அங்கு முக்கியமான விருந்தாளி 'நாம்' தான் என்று எண்ணும் போது ஸ்ரீமதி ஜானகி ஜம்புநாதனின் மனம் சந்தோஷத்தினால் பூரித்தது. அனைவரும் ஜானகியிடம் வந்து, அவள் கணவரின் உடல் நிலையைப் பற்றி வெகு அக்கறையுடன் விசாரித்தனர்.

வெளியில் தோட்டத்துப் புல் தரையில் ஓர் ஆடம்பரமான தேநீர் விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தாள் ஸ்ரீமதி லலிதா ராமாமிருதம். தோட்டம் ஓர் இந்திரபுரியாகத் தோற்றமளித்தது. பளபளப்பான கலர்களில் புடவை யணிந்த பெண்மணிகள் கலகலப்பாக இங்கும் அங்கும் நடந்தனர்.

பிரதான மேஜையில், மிஸஸ் ராமாமிருதத்தினால் அமர்த்தப்பட்ட போது, ஸ்ரீமதி ஜானகி ஜம்புநாதனின் மனம் தன் லட்சியக் கனவு ஈடேறி விட்டதை எண்ணிப் பூரித்தது.

நேரம் கழிந்ததே தெரியவில்லை. ''விரைவில் கிளம்ப வேண்டும்'' என்று எண்ணிக் கொண்டிருந்த ஜானகி, அங்கிருந்து கிளம்ப மனமின்றிப் பேச்சில் லயித்து, புகழ்ச்சியில் மயங்கி விட்டாள்.

தேநீர் விருந்து முடிந்த பிறகு, ஒரு வேலைக்காரப் பெண் எல்லோருக்கும் அழகான பிளாஸ்டிக் கூடையில் போட்ட தாம்பூலத்தை வழங்க, சோபாவில் சொகுசாக அமர்ந்திருந்த சப்–ஜட்ஜின் மனைவி கைகூப்பி அனைவருக்கும் விடைகொடுத்தாள்.

''நீங்கள் வருவதே அபூர்வம். நான் அனுப்பும் வரை கிளம்பக் கூடாது....'' என்று உபசாரமாகக் கூறி ஜானகியைக் கடைசி வரை நிறுத்தி விட்டாள், லலிதா ராமாமிருதம்.

தனிமையில் விடப்பட்ட இருவரும் வெகு அந்நியோந்நியமாக அரை மணி நேரம் உரையாடினர். அப்பொழுது அங்கு வந்து சேர்ந்த சப்–ஜட்ஜ் ராமாமிருதம் மரியாதையுடன் வணக்கம் தெரிவித்துவிட்டு அவர்களுடன் பேச்சில் கலந்து கொண்டார். கணவன் – மனைவி இருவரும் வெகு கவலையுடன் ஜம்புநாதனின் உடல்நிலையைப் பற்றி விசாரித்தனர்.

சட்டென்று விட்டு ஞாபகம் வரப்பெற்றவளாக ஜானகி விடைபெற எழுந்த போது, ''அடடா! என்ன மறதி! ஓர் ஐந்து நிமிடம் இருங்கள்'' என்று கூறிவிட்டு, டெலிபோனின் அருகில் சென்ற லலிதா ஏதோ நம்பரை வேகமாகச் சுழற்றினாள். ஒரு பிரபல ஜவுளிக்கடையின் நம்பர் அது என்று ஜானகியம்மாள் புரிந்து கொண்டாள்.

விலை உயர்ந்த 'பட்டு ரவிக்கை'த் துணி ஒரு செஜம் உடனே ஆள் மூலம் அனுப்பும்படி உத்தரவிட்ட மிஸஸ் ராமாமிருதம் போனை அதன் இடத்தில் பொருத்திவிட்டுப் புன்னகையுடன் ஜானகியைப் பார்த்துச் சிரித்தபடியே, ''பெரிய சுமங்கலி நீங்கள்! பண்டிகை நாளில் வந்திருக்கிறீர்கள். வெறும் தாம்பூலமா வழங்குவது?'' என்று கூறினாள்.

சிறிது நேரத்தில் ஜவுளிக்கடைப் பையன் ஒரு காகிதப் பையைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டுச் சென்றான்.

பரம்பரைப் பணக்காரக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவள் மிஸஸ் லலிதா ராமாமிருதம். புகுந்த இடமும் செல்வச் செழிப்புள்ளது. அந்த வட்டாரத்திலேயே பெரிய மனுஷி. அவள் தன்னை மதித்து மரியாதை செய்யும் வாய்ப்பு ஏற்பட்



## மிகச் சிறந்தது

மிகச் சிறந்த போதகர்—மனம்
மிகச் சிறந்த ஆசிரியர்—காலம்
மிகச் சிறந்த புத்தகம்—உலகம்
மிகச் சிறந்த நண்பர்—இறைவன்

**யூதர்களின் பைபிள்** —'மிதுனம்'

டிருக்கிறதென்றால்..... எல்லாம் தன் அந்தஸ்தும் செல்வமும்தான் காரணம். இந்த எண்ணமே ஜானகி ஜம்புநாதனை மேலும் கர்வப்படச் செய்தது.

காரில் வீடு திரும்பும் போது ரவிக்கைத் துணிப் பொட்டலத்தை ஆவலுடன் பிரித்துப் பார்த்தாள். பார்த்தவள் பரவசத்தினால் திகைத்து விட்டாள். ஜரிகையினால் நெய்யப்பட்ட பட்டு டிஷ்யூ ரவிக்கைத் துண்டு அது. ஒரு கஜம் குறைந்தது நாற்பது ரூபாயாவது இருக்கும். லலிதா ராமாமிருதம் மிஸஸ் ஜம்புநாதன் மனத்தில் இன்னும் ஒரு படி உயர்ந்து விட்டாள்.

ஒரு சாலையின் திருப்பத்தில் கார் ஒரு குலுக்கலுடன் நின்றபோது ஜானகியம்மாள் தன் கனவுலகிலிருந்து விடுபட்டாள்.

கீழே இறங்கிக் கார் சக்கரங்களை ஆராய்ந்த டிரைவர், "அம்மா! டயர் பஞ்சராயிடுத்தும்மா. பத்து நிமிஷத்துலே 'ஸ்டெப்பனி' மாட்டிடறேன்" என்று கூறிய வார்த்தைகள் அவள் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. அவன் கூறியதை லட்சியம் செய்யாமல் கார் நின்றிருந்த சுற்றுப்புறச் சூழ்நிலையை ஆராய்ந்து ஒருவித அருவருப்புடன் முகம் சுளித்தாள் மிஸஸ் ஜம்புநாதன்.

அது நடுத்தர வகுப்பினரும், அதற்குக் கீழ்ப்பட்டோரும் வாழும் ஒரு சாலை. எல்லாம் பழைய காலத்துக் கூரை வீடுகள். ஒரு காலத்தில் தான் பிறந்து வளர்ந்ததும் பிறகு புக்ககம் புகுந்ததும் இதே மாதிரியான வீட்டில்தான் என்பதை ஜட்ஜ் மனைவி சிறிதும் ஞாபகப்படுத்திக் கொள்ள விரும்பாதவள் போலத் தலையைப் பலமாக ஆட்டினாள்.

"என்னப்பா, டிரைவர்! இங்கே கொண்டு வந்து நிறுத்திட்டயே....!" என்று தன் வெறுப்பைக் குரலில் கொட்டினாள் மிஸஸ் ஜம்புநாதன்.

"என்னம்மா, செய்யறது? புது டியூப்..... பஞ்சராயிடுத்துங்களே.....! ஓர் ஐந்து நிமிஷம். வேறே டயர் மாத்திடறேன்." டிரைவர் பணிவாகப் பதிலளித்துவிட்டுச் சுறுசுறுப்பாகத் தன் வேலையில் முனைந்தான்.

இரவு எட்டரை மணி. சாலையில் வெளிச்சம் குறைவு. சட்டென்று எதிரே இருந்த வீட்டினுள் நுழைந்து ஒரு விளக்கைக் கேட்டான் டிரைவர்.

மெலிந்த தேகமுடைய ஒரு பெண்மணி, ஓர் அரிக்கேன் விளக்கைத் தூக்கிப் பிடித்த படி வெளியில் வந்து டிரைவரிடம் ஏதோ விசாரித்தாள்.

அடுத்த நிமிடம் பரபரப்பாக விளக்குடன் அருகில் வந்தவள் புடைவைத் தலைப்பை இழுத்து அடக்கமாகப் போர்த்திக் கொண்டு, "மாமி வாங்கோ! காரில் உட்கார்ந்திருப்பானேன்? டிரைவர் டயர் மாத்தட்டும். இது எங்க வீடுதான்..." என்று கூறிக் கொண்டே கார் கதவைத் திறக்கும் கைப் பிடிமேல் தன் கையை வைத்தாள். மிஸஸ் ஜம்புநாதன் அருவருப்புடன் அவளையும் கதவின் பிடிமேல் இருந்த அவள் கையையும் பார்த்தாள்.

அந்த விளக்கு வெளிச்சத்தில் அந்த அம்மாளின் எளிமை — அதாவது வறுமையில் வலிய ஏற்படுத்தப்பட்ட எளிமைத் தோற்றம் நன்றாகத் தெரிந்தது. பொன்னகை இல்லாவிட்டாலும் பளிச்சென்று குங்குமம் இட்ட முகத்தில் புன்னகை பிரகாசித்தது. கழுத்தில் தாலிச் சரட்டையும், கையில் ஒற்றைக் கண்ணாடி வளையலையும் தவிர வேறு ஆபரணம் இல்லை.

"என்னைத் தெரியல்லையா, மாமி! உங்க பெரிய பெண் கல்யாணத்தின்போது சீர் முறுக்கு சுற்ற வந்திருந்தேனே! உங்கள் வீட்டுக்காரர் வக்கீலாக இருந்த போது எங்களவர் குமாஸ்தாவாக இருந்தாரே, நினைவிருக்கா? என் பேரு மீனு.....!"

'ஓ! வக்கீல் குமாஸ்தா சுவாமிநாதனின் மனைவி மீனாட்சியா இவள்? அப்பொழுது இளமைக் கோலத்தில் தானேகூடப் பொறாமைப்படும்படியான அழகியாக இருந்தாளே! இப்பொழுது வறுமைக் கோலத்தில் தன்னை விட முதுமையாகத் தோற்றமளிக்கிறாளே!' ஜானகியம்மாள் வியப்புடனும் அதே சமயத்தில் 'என்ன தைரியம், நம்மை இவள் தன் வீட்டுக்குக் கூப்பிடுகிறாளே?' என்ற ஆத்திரத்துடனும் அவளை உற்றுப் பார்த்தாள்.

"இறங்கி ஓர் ஐந்து நிமிஷம் உள்ளே வந்து தாம்பூலம் வாங்கிக் கொண்டு போங்கோ மாமி! அவரும் உங்களைப் பார்த்தால் சந்தோஷப்படுவார். இரண்டு வருஷமா வாத நோயினாலே படுத்த படுக்கை. அதனாலே ரொம்பக் கஷ்டம். உங்களவர் கிட்டே வேலை செய்ததைப் பற்றி வாய் ஓயாமல் சொல்லிக் கொண்டேயிருப்பார்!"

அந்த இருண்ட தரித்திரம் பிடித்த வீட்டினுள் இறங்கிப் போவதா? சீச்சீ! முகம் சுளித்த மிஸஸ் ஜம்புநாதன், "வேண்டாம். காரிலேயே இருக்கிறேன்" என்று கூற வாய் திறந்த போது பணிவுடன் வந்து நின்ற டிரைவர், "கொஞ்சம் நீங்கள் இறங்கிக் கொண்டால் தேவலை அம்மா. பின் சக்கரம் பஞ்சர்.... 'ஜாக்கி' போட்டுத் தூக்கி நொடியில் மாற்றி விடறேன்" என்றான்.

அக்கம்பக்கத்து வீடுகளிலிருந்து தரித்திரம் பிடித்த, நாகரிகமற்ற கும்பல் வெளியே எட்டிப் பார்க்க வீதியில் நிற்பதைவிட உள்ளே போவதே நலம் என்று ஜானகியம்மாள் உடல் முழுதும் கோபமும் ஆத்திரமும் கொதிக்க அந்த வீட்டினுள் நுழைந்தாள்.

கொழுத்த, சுவையான கோழிக் குஞ்சுகள், அடுப்பில் ஜோராக வறுத்தது. உங்கள் விருப்பப்படி உருளைக்கிழங்குடன் தாளப்படுகிறது. உங்களுக்கு பிடித்தமான பச்சடி. உங்கள் குடும்பத்திற்கும் திடீர் விருந்தாளிகளுக்கும் நொடியில் சாப்பாடு தயார். இவ்வளவும் ஒரு விநாடியில் சிரமமின்றி மின்விசையால்—பஜாஜ் சமையல் சாதனங்களின் உதவியுடன் தயாராகிறது.

விசையைத் தட்டி விடுங்கள், பத்தாம்பசலி அடுப்புகள், குமட்டிகளை வைத்துக் கொண்டு அவதிப்பட வேண்டாம். நேரம் எவ்வளவு மிச்சம்! அனுபவிக்க எவ்வளவு ஓய்வு.

நவீன வாழ்வுக்கு பஜாஜ் சாதனங்களுடன் திரும்புக. பஜாஜ் வியாபாரிகளின் ஷோ ரூமில் விரைவில் நுழையுங்கள்.

அடுப்பும் இறைச்சி வேகவைக்கும் கம்பி வலையும் கூடியது ○ மின் தட்டுகள் ○ பிரெஷர் குக்கர்கள்—டோஸ்டர் ○ காப்பி வடிகட்டி ○ டீ கெட்டில் பழக்கலவை—இன்னும் பலப்பல விரைவில் வருபவை.

**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**
45-47, வீரநரிமன் ரோடு, பம்பாய்-1
இந்தியா முழுவதிலும் கிளைகளுண்டு.

# நவீன வாழ்வுக்கு பஜாஜ் சாதனங்களுடன் திரும்புக



சமையலறை அமைப்பு உதவி—ஜாலி மாடர்ன் கிச்சன் எக்விப்மெண்ட்ஸ் பிரைவேட் லிட்.

# ஸிங்கர்*

## விலைவாசியைக் கட்டுப்படுததுகிறது இப்போது எல்லா மெர்ரிட் தையல் மெஷின்களும் குறைந்த விலைகளில் கிடைக்கின்றன




எல்லா மெர்ரிட் தையல் மெஷின் மாடல்களுக்கும் விலை கணிசமாகக் குறைக்கப் பட்டிருப்பதை அறிவிக்கிறது ஸிங்கர்!

காலைக் கடத்தாதீர்கள் ... அருகாமையிலுள்ள அங்கீகாரம் பெற்ற ஸிங்கர் வியாபாரியையோ அல்லது ஸிங்கர் கடையையோ அணுகுங்கள்! இப்போதைய விலை இறக்கத்தைப் பயன் படுத்திக் கொள்ளுங்கள்!

குறைக்கப்பட்ட புதிய தவணை முறைத் திட்டம் முதல் தவணை
**ரூ. 31**

*ஸிங்கர் கம்பெனியின் ஒரு ட்ரேட் மார்க்

தரத்திலே புது உயர்வு...விலையிலே புது இறக்கம்!

பெயரில் மெர்ரிட், புகழில் ஸிங்கர்

S.S.G. 40 TAM

‘கெட்ட கேட்டுக்குக் கொலு வேறயா?’ என்று அவள் வாய் முணுமுணுத்தது. அந்த இருண்ட அறையின் பாதியைப் பழைய காலத்துச் சாயம் போன, மூக்கு, கைகால் உடைந்த மண் பொம்மைகள் கொலுவாக வீற்றிருந்து அடைத்துக் கொண்டிருந்தன. ஒரு மணைமேல் புத்தகங்கள் அடுக்கப்பட்டு, அதன் மேல் சாயம் போன ஒரு சரஸ்வதி பொம்மை வைத்துப் பூஜை செய்யப்பட்டிருந்தது. பக்கத்தில் ஒரு பழங்காலத்து ஆர்மோனிய பெட்டி, அதன் மேல் ஒரு முரட்டுச் சீட்டி ரவிக்கைத் துணி. மேலே அரளிப் பூக்களும் அட்சதையும் சிதறிக் கிடந்தன. சிறிய குத்து விளக்குகள் அங்கு மங்கலான வெளிச்சத்தைப் பரப்பின.



‘‘மேலே இருக்கும் லக்கேஜுக்கு டிக்கட்டு யார் சார், வச்சிருக்கீங்க?’’

சப்-ஜட்ஜ் வீட்டுக் கொலுக் காட்சிக்கும் இதற்கும் எவ்வளவு வித்தியாசம்! இயற்கை மணம் போதாதென்று.... செயற்கை மணமும் கூட்ட உயர்ந்த ரக சென்டுகள் தெளிக்கப்பட்ட ரோஜா மாலைகள்! வெண் பட்டாடை அணிந்து அந்த ரோஜா மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட அந்த சரஸ்வதி எங்கே? இங்கு இந்தச் சரஸ்வதிக்கும் தரித்திரம் பிடித்து விட்டதா ?

தான் முற்றும் மறந்துவிட்டிருந்த அந்தத் தரித்திரச் சூழ்நிலையில் திரும்பவும் நிற்க நேர்ந்ததை எண்ணி அருவருப்பைவிட ஆத்திரமும் கோபமுமே அதிகம் உந்த நின்ற மிஸஸ் ஜம்புநாதனை உபசரிக்க மீனாட்சி பரபரப்புடன் அங்கும் இங்கும் ஓடினாள்.

பழைய துணிமணிகளை அப்புறப்படுத்தி விட்டு, ஒரு மணையைப் போட்டு உட்காரும்படி உபசரித்தாள். தன் ஜரிகைப் புடவை அழுக்காகி விடுமோ என்று பயந்த ஜானகி தன் கைக்குட்டையை விரித்து மணை மேல் போட்டுக் கொண்டு உட்கார்ந்தாள்.

அடுத்த அறையின் கதவைத் திறந்து குசுகுசுத்த குரலில், ‘‘ஜட்ஜ் ஜம்புநாதனின் மனைவி, ஜானகி மாமி...’’ என்று மீனு தன் கணவனிடம் சொல்லியிருக்க வேண்டும்.

கதவை அகலத் திறந்து அவள் ஒதுங்கி நிற்க, அங்குள்ள மங்கலான ஒளியில் ஒரு கயிற்றுக் கட்டிலில் படுத்திருந்த மெலிந்த உருவம் முகத்தை மட்டும் திருப்பி, ‘‘நமஸ்காரம் அம்மா! நீங்கள் அபூர்வமாக வந்திருக்கிறீர்கள்! எழுந்திருக்க முடியாமல் படுத்திருக்கிறேன். இதை விட என்ன கொடுமை வேண்டும்?’’ என்று ஈனஸ்வரத்தில் கூறியது. தொடர்ந்து, ‘‘ஜம்புநாதன் சாருக்கு ஏதோ உடம்பு சரியில்லைன்னு கேள்விப்பட்டேன். தேவலையா?’’ என்று விசாரித்தது.

‘‘உம்.... உம்!’’ என்று அலட்சியமாக பதில் அளித்த ஜானகியின் கவனம் முழுவதும் அங்கு குறுக்கும் நெடுக்குமாக ஓடிக்கொண்டிருந்த சோனிக் குழந்தை ஒன்று எங்கே, தன் மேல் விழுந்து தன் புதுப்புடவையைப் பாழாக்கி விடுமோ என்பதிலேயே இருந்ததால், அது அருகில் வந்ததும் சட்டென்று மணையை விட்டு எழுந்தாள்!

‘‘அம்மா! ஆயிடுச்சுங்க அம்மா! கார் ரெடி....’’ என்ற டிரைவரின் குரல் காதில் அமுதம் போல விழுந்தது.

‘‘ஒரு நிமிஷம். வெற்றிலே, சீலைபெற்றுக்கொள்ள வேண்டும்’’ என்ற மீனு பரபரப்பாக ஒரு பித்தளைத் தட்டில், வெற்றிலே, பாக்கு, மஞ்சள் பழம், தேங்காய் எல்லாம் வைத்தாள். பிறகு பயபக்தியுடன் ஆர்மோனியத்தின் மேல் சாற்றப்பட்டிருந்த சீட்டி ரவிக்கைத் துணியை எடுத்து மடித்துத் தட்டில் வைத்தாள். சரஸ்வதி சிலையின் காலடியில் இருந்த கதம்பச் சரத்தை எடுத்து அதன் மேல் வைத்து ஜானகியிடம் பவ்வியமாக நீட்டினாள்.

ஜானகி ஜம்புநாதன் வேண்டாவெறுப்பாக அதைப் பெற்றுக் கொண்டதும், தட்டைக் கீழே வைத்த மீனு, ‘‘உங்க வாயாலே ஆசீர்வாதம் பண்ணுங்கோ, மாமி!’’ என்று கூறித் தரையில் விழுந்து வணங்கினாள். அதையும் வேண்டா வெறுப்பாகவே ஏற்றுக் கொண்டாள் ஜானகி. காருக்குள்ளே அவள் ஏறிக் கொண்ட போது, ‘‘ஏதோ நாங்கள் செய்த புண்ணியம்’’ என்று கூறிக்கொண்டே காரினருகில் வந்து நின்ற மீனுவைத் திரும்பிப் பார்க்காமல் மறுபுறம் தலையைத் திருப்பிக் கொண்டாள் ஜட்ஜின் மனைவி.

மீனு கார் மறையும் வரை வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தாள்.

‘‘ச்சே.... தரித்திரங்கள்.... இந்த அழுகுக்கு.... ரவிக்கைத் துணி வேறு! வேலைக்காரி கண்ணம்மாகூட இதைக் கொடுத்தால் வாங்கிக் கொள்ள மாட்டாள்’’ என்று முணு முணுத்தவள் தன் வீட்டில் தொங்கும் விலை உயர்ந்த திரைச்சீலைகளையும், சோபா உறைத் துணிகளையும் ஒரு நிமிஷம் மனத்தில் எண்ணிப் பார்த்து, அருவருப்பான முகச் சுளிப்புடன் சீட்டின் ஓரத்தில் அந்தச் சீட்டித் துணியை எறிந்தாள்.

அத்துடன் அரளிப் பூக்கள் வைத்துத் தொடுக்கப்பட்ட கதம்பச் சரத்தையும் வீசிய போது, அவளையறியாமல் கொண்டையிலிருந்த மல்லிகைச் சர வேணியைக் கைகள் தடவின. அது ஸ்பெஷலாக, லலிதா ராமாமிருதத்தினால் பூக்கடையில் ஆர்டர் கொடுத்துத் தொடுத்து அன்று மாலை எல்லாப் பெண்களுக்கும் கொடுக்கப்பட்ட வேணி.

அதை அடுத்து மிஸஸ் ராமாமிருதம் அளித்த பட்டு ரவிக்கைத் துணியை எடுத்துக் கையினால் பரவசத்துடன் தடவிய போது கார் பிரதான வீதியில் நுழைந்தது.

''டிரைவர் ! ஒரு நிமிஷம் 'மருந்து ஷாப்' முன்னால் நிறுத்து!'' என்ற ஜானகி காருக்குள் தன் டம்பப் பை இல்லாததை அப்பொழுதுதான் கவனித்தவளாகத் திடுக்கிட்டாள்.

''அடடா ! டாக்டர் பிரிஸ்கிரிப்ஷன், பணம் எல்லாம் அதில் இருக்கே! 'ஹாண்ட் பே'கைக் காணுமே!'' என்றவள், ''ஆ! ஆமாம். சப் ஜட்ஜ் மனைவி தன் மகளுக்காகப் புதிதாக லண்டனிலிருந்து தருவித்திருந்த விலை உயர்ந்த 'பியானு'வைக் காட்டிக் கொண்டிருந்த போது அதன் மேல் என் கைப் பையை வைத்தேனே!'' என்று ஞாபகம் வரப்பெற்றவளாக, ''டிரைவர், சப் ஜட்ஜ் வீட்டுக்குத் திருப்பு காரை! ஹாண்ட் பேக் விட்டுப் போச்சு'' என்றுள்.

சப்–ஜட்ஜ் ராமாமிருதத்தின் பங்களா வாயிலில் கார் நின்ற போது, முதலில் டிரைவரை அனுப்பித்தான் கைப் பையை வாங்கி வரச் செய்ய நினைத்தாள். ஆனால் அருவருப்பான தரித்திரக் காட்சிகள் நிறைந்திருந்த தன் மனத்தைத் திரும்ப சப்–ஜட்ஜ் வீட்டுச் செல்வக் காட்சிகளைக் கொண்டு மகிழ்விக்கும் ஆவலில் தானே இறங்கி உள்ளே சென்றுள்.

மணி ஒன்பது ஆகிவிட்டிருந்ததால், வீதி வராந்தா விளக்கும் அணைக்கப்பட்டிருந்தது. மங்கலான வெளிச்சத்தில் மெதுவாகத் தோட்டத்தைக் கடந்த ஜானகி ஜம்புநாதன், ஒரு நிமிடம் வராந்தாப் படிகளில் தயங்கி நின்றுள்.

ஹாலிலிருந்து மிஸஸ் லலிதா ராமாமிருதத்தின் குரல் மிகத் தெளிவாகக் கேட்டது:

''ஏதோ குருட்டு அதிர்ஷ்டம். குப்பையில் கிடந்தவர் ஜட்ஜாகி விட்டார்.

''அதுதான் போகட்டும். இவளோட கர்வத்தைப் பாருங்களேன். என்னமோ அரண்மனையில் பிறந்து வளர்ந்தவள் மாதிரி பேச்சும், தோரணையும். இன்னிக்குத் தண்டம் நாற்பது ரூபாய்! ஆமாம், அவருக்கு டைபாயிட்டாமே!''

''ஆமாம், ஆமாம். இந்த வயசுலே வரக் கூடாதுதான். பிழைக்கிறது ரொம்ப சிரமம் தான்.'' — இது அவள் கணவரின் குரல்.

''ஐயோ! இவள் அலங்காரமும்! ஆடம்பரமும்! புதுப் பணமோல்லியோ! இந்த லட்சணத்திலே, ஜரிகை டம்பப் பை வேறு! எல்லாம் எவ்வளவு நாளைக்கு? அவர் 'பட்'டுன்னு மண்டையைப் போட்டால் தெரியும் சேதி !''

இதைத் தொடர்ந்து இருவரும் ஏதோ ஹாஸ்யத்தைக் கண்டவர் போல உரக்கச் சிரித்தனர்.

ஜானகி ஜம்புநாதனின் உடம்பு தலையிலிருந்து கால் வரை நடுக்கம் கண்டது. கண்கள் இருண்டன. திரும்பி ஓசை இல்லாமல் எப்படிக் காரில் வந்து ஏறினேம் என்று தெரியாதவளாக வியர்வை வெள்ளத்தில் குளித்துக் கொண்டிருந்த போது, ''எம்மா ! பை இங்கே இல்லீங்களா ? பின்னே அந்த வீட்டுலே, விட்டிருப்பீங்களோ ?'' என்ற டிரைவரின் குரலைத் தொடர்ந்து அந்த மன நிலையிலும் ஜானகிக்குச் சட்டென்று ஞாபகம் வந்தது :

'மீனு வீட்டில் தாம்பூலம் பெற்றுக் கொள்ளும் போது எங்கே, கீழே வைத்தால் அந்தச் சோனிக் குழந்தை தன் அழுக்குக் கையால் தொட்டு விடுமோ என்று பயந்து சட்டென்று சுவரில் இருந்த ஆணியில் மாட்டினேனே !'

டிரைவர் அவள் உத்தரவுக்குக் காத்திராமல் நேராகக் காரை மீனு வீட்டை நோக்கிச் செலுத்தினன்.

ஒரே மாதிரியாகக் கட்டப்பட்டிருந்த அந்த நான்கு வீடுகளில் எது மீனுவின் வீடு என்று இப்பொழுது அந்த மங்கலான வெளிச்சத்தில் அடையாளம் கண்டுகொள்ள முடியாமல், டிரைவர் முதல் வீட்டருகில் காரை நிறுத்திவிட்டு விசாரிக்கக் கீழே இறங்கிய பொழுது தன் கணவரை விட்டு வந்து வெகு நேரமாவதை உணர்ந்து பரபரப்படைந்தாள் ஜானகி.

சப் ஜட்ஜ் வீட்டில் அவள் கேட்ட சம்பாஷணை வேறு அவளை வெகுவாகப் பாதித்திருந்தது.

'அதோ.... அந்தக் குப்பைத் தொட்டியின் எதிரில் காணப்படும் வீடுதான் போலிருக்கிறதே......!' டிரைவருக்குக் குரல் கொடுத்தும் அது அவன் காதில் விழவில்லை. முதல் வீட்டு ஜன்னல் வழியாக யாரிடமோ விசாரித்துக் கொண்டிருந்தான். 'நேரமாகிறதே' என்று துடித்தவள், விடுவிடு என்று கீழே இறங்கி நடந்து வீதியிலிருந்த வாறே, திறந்திருந்த கதவின் வழியே எட்டிப் பார்த்துத் தன் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள முயன்றுள்.

மீனுவின் வீடுதான். கணவனும், மனைவியும் பேசிக் கொள்வது தெளிவாகக் காதில் விழுந்தது.

''மீனுட்சி! நீ செய்தது துளியும் நன்ருக இல்லை. அந்த ஒன்றரை ரூபாய் சீட்டித் துணியைப் பெருமையாகத் தாம்பூலத்தில் வைத்துக் கொடுப்பானேன்? தன்னை அவமானப்படுத்தறதா அந்த அம்மாள் நினைச்சிண்டிருப்பா.....!''

மீனு இடைமறித்து, ''நீங்க, அலட்டிக்காதேங்கோ! அப்படி ஒன்றும் நேராது. நான் காலையில் சிரத்தையாக சஹஸ்ரநாமம் படித்துப் பூஜை செய்து சுவாமிக்குச் சாத்திய ரவிக்கைத் துண்டு. அவருக்கு உடம்பு சரியில்லேன்னு கேட்டதும் மனசுக்குக் கஷ்டமாக இருந்தது. அவர் ஆதி நாளிலே நமக்குக் கொஞ்சமாகவா உபகாரம் செய்திருக்கிருர்! அவருக்குச் சீக்கிரம் உடம்பு குணமாகணும்னு வேண்டிண்டு பூஜையிலிருந்து ரவிக்கைத் துணியை எடுத்துக் கொடுத்தேன். அவருக்கு ஒரு கெடுதியும் நேராது! பெரிய சுமங்கலியாக அந்த அம்மாள் நம் வீட்டுக்கு நவராத்திரி வெள்ளிக்கிழமையில், அதுவும் சரஸ்வதி பூஜையன்று வந்து தாம்பூலம் பெற்றுக் கொள்ள நாம் கொடுத்து வைச்சிருக்கணுமே. வீடு தேடி அம்பாளே, லலிய வந்தாப்பலே வந்து ஆசீர்வாதம் பண்ணியிருக்கிருர். உங்களுக்கும் உடம்பு சீக்கிரம் குணமாயிடும். சந்தேகமே இல்லை. பாவம்! கவலையில் கைப் பையை மறந்துட்டுப் போயிட்டார். நாளைக்கு நானே

# உலகப் புகழ்பெற்ற நாட்டிங்ஹாம் லேஸ் உங்கள் உடை அலமாரிக்கு என்றுமில்லாப் புத்தெழிலைத் தருகிறது!

## வீலா லேஸ்:

காண அழகான... அணிந்தால் பிரமிப்பூட்டும்... வீலா லேஸ் (பூத்தையல் இழை) - அசல் நாட்டிங்ஹாம் லேஸ் தற்போது பாரதத்திலேயே தயாரிக்கப் படுகிறது. பரபரப்பூட்டும் பலவித டிஸைன்கள், கவர்ச்சிகர வர்ண வகைகளில் தேர்ந்தெடுங்கள்- ஆடையணிகள், ஸ்கர்ட்டுகள் அல்லது எப்பொழுதாவது அணியும் ஆடைகளுக்கு. சோளிகள், ரவிக்கைகள் மற்றும் ஸல்வார் கமீஸ் ஆகியவற்றுடன் கூடிய உடை அலமாரியைக் கனவிலும் நினைக்க முடியாத குறைந்த விலையில் லேஸ் மயமாக்குங்கள். சிறந்த கடைகளில் விரைவில் வீலா லேஸைக் காணுங்கள்- எல்லாவற்றிற்குமே வீலா லேஸ் எனவிரும்பத் தொடங்குவீர்கள்!



பிரமிப்பூட்டும் பொலிவு.

● சலவை முறைக் குறிப்புகளின் துண்டுப் பிரசுரத்தைக் கேட்டுப் பெறவும்.

**வீலா லேஸ்**

ஏற்றுமதி பற்றிய எல்லா விவரங்களையும் அறிய, எழுதவும்:
ஸ்ரீ. வி.பி. கிருஷ்ணன் நாயர்,
மானேஜிங் டைரக்டர்.

வீலா ஸ்காட்டிஷ் லேஸ் ப்ரைவேட் லிமிடெட்,
அந்தேரி - குர்லா ரோட், பம்பாய்-59- AS

ஏஜெண்டுகள்: மாயா டெக்ஸ்டைல் ஹால், 69, நட்டன் பஜார், சென்னை-3.
தி க்ரீன் ஷாப், கமர்ஷியல் ஸ்ட்ரீட், பெங்களூர்.

கொண்டு போய்க் கொடுத்துவிட்டு அவர் உடம்பைப் பற்றி விசாரித்து விட்டு வரேன்.''

ஜானகி ஜம்புநாதனின் மெய் சிலிர்த்தது. பணத்தாசையும் பகட்டும் வாழ்வின் மோகமும் ஏழைகளின் மேலுள்ள வெறுப்பும், அவளையறியாமல் கண்களிலிருந்து வழிந்த கண்ணீரில் கரைந்து ஒரு நொடியில் அவளை விட்டு விலகி உடலும் மனமும் இலேசாகிவிட்டதுபோல ஒருபிரமை.

திறந்திருந்த கதவின் வழியாகத் தெரிந்த குத்துவிளக்கின் அடக்கமான முத்துச் சுடரிலிருந்து ஒரு பொறி தெறித்து விழுந்தது. சப் ஜட்ஜ் வீட்டில் காணப்படாத ஒரு தெய்வீகம் இப்பொழுது அந்தச் சாயம் போன சரஸ்வதி சிலையிலிருந்து வெளிப்பட்ட மாதிரி இருந்தது. ஜானகி ஜம்புநாதனின் கை, தாலிச் சரட்டை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டது.

மௌனமாகக் காரில் ஏறி உட்கார்ந்து, ''சீக்கிரம் வீட்டுக்கு விடு, டிரைவர்!'' என்று கூறிய எஜமானியின் கைகளில் டம்பப் பை இல்லாததைக் கவனித்தாலும் வாய் திறந்து எதுவும் கேட்கவில்லை அந்தக் காரோட்டி.

கார் போர்டிகோவில் நின்றதுமே ஓடி வந்து கதவைத் திறந்த வேலைக்காரி கண்ணம்மா, ''ஐயா ரெண்டுவாட்டி நீங்க வந்தாச்சான்னு கேட்டாங்கம்மா'' என்று தெரிவித்தாள்.

பரபரப்புடன் தன் அறையுள் சென்று மாற்றுடை தரித்துக் கொண்டிருந்தபோது, காரில் சிதறிக் கிடந்த தாம்பூலத்தையும், ரவிக்கைத் துணிகளையும் கொண்டு வந்து கண்ணம்மா மேஜை மேல் வைத்தாள்.

சட்டென்று தன் தலையிலிருந்த மல்லிகைச் சர வேணியை எடுத்து மேஜை மேல் வைத்துவிட்டு, கதம்பச் சரத்தை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டு தலையில் சூட்டிக் கொண்டாள் ஜானகி.

அதே வேகத்தில் பட்டு ரவிக்கைத் துணியைக் கையில் எடுத்து அதை அருகில் நின்ற கண்ணம்மாவிடம் கொடுத்தாள். ''நீ இதைத் தைச்சுப் போட்டுக்கோ கண்ணம்மா!'' என்று கூறிவிட்டுச் சீட்டி ரவிக்கைத் துணியை எடுத்து மார்புடன் அணைத்தவாறு தன் கணவர் அறையை நோக்கி நடக்கும் எஜமானி அம்மாளை வியப்புடன் பார்த்துத் திகைத்து நின்றாள் கண்ணம்மா.

# மாலிக்காபூர்

பதின்மூன்றும் நூற்றாண்டில் நிகழ்ந்த சரித்திர நிகழ்ச்சிகள் சிலவற்றைச் சான்றுகளாக வைத்துக் கொண்டு, கற்பனை மெருகோடு புனையப்பட்டிருக்கிறது இந்நாடகம்.

அதிர்ச்சி தரும் விதத்தில் வடநாட்டிலிருந்து படையெடுத்து வந்து தென்னகத்தைக் கலங்க வைத்து, கொலை, கொள்ளை முதலிய பயங்கரச் செயல்களைச் செய்து சூறாவளியாய்ச் சுழன்ற மொகலாய வீரன் மாலிக்காபூரை அழகாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார், நாடகாசிரியர். சதிக்கு மேல் சதி செய்து, திட்டத்துக்கு மேல் திட்டம் தீட்டி, வெற்றிக்கு மேல் வெற்றி பெற்று வந்த மதியூகி மாலிக்காபூர் இறுதியில் தமிழ்நாட்டுப் புத்திகூர்மைக்கு அடிபணிய நேர்ந்ததாக நாடகத்தை முடித்தது பாராட்டுக்குரியது. நாடகத்தில் நிறைய 'சஸ்பென்ஸ்'களும் திருப்பங்களும் அமைந்திருப்பதால் பார்ப்பதற்கு சுவாரஸ்யமாகவும், விறுவிறுப்பாகவும் இருக்கிறது.

மாலிக்காபூராக வந்த சினிமா நடிகர் மனோகர் அருமையாக நடித்தார். பலப் பல முக பாவங்களிலும், உணர்ச்சி மயமான பேச்சுக்களிலும் அவரது சிறந்த நடிப்பைக் காண முடிகிறது.

வசனம் நன்றாயிருக்கிறது. மதுரை திருமாறன் எழுதியிருக்கிறார்.

விக்கிரம பாண்டியனாக வந்த எஸ். வி. ராமதாஸ், அலாவுதீனாக வந்த சி. பி. பானு, ஜலாலுதீனாக வந்த வேலுச்சாமி, சுந்தர பாண்டியனாக வந்த பீலி சிவம் ஆகியவர்கள் தங்கள் தங்கள் பாத்திரங்களை உணர்ந்து நன்றாக நடித்தார்கள். அமைச்சர் கங்கா தேவியாக வந்த எம். ஆர். நிர்மலாதேவியின் நடிப்பு குறிப்பிடத்தக்கதா யிருந்தது.

காட்சி ஜோடனைகளும், மொகலாயர் உடைகளும் பொருத்தமாயிருந்தன.

காதலிக்க நேரம் இருந்தும், காதலிக்க யாருக்கும் இடம் அளிக்கப்படவில்லையென்பது குறிப்பிடத் தக்கது! நாடகத்தில் நடனத்தை எங்கும் புகுத்தாமல் விட்டது ஒரு புதுமைதான்!

நேஷனல் தியேட்டர்ஸாரின் ''மாலிக்காபூர்'' ஒரு மகத்தான நாடகம்தான்!



# தீபாவளிச் சங்கற்பம்

தமிழழகன்



புத்தம் புதுவுடை பூணும் நாம் வாழ்வும்
புதுமையாய்ப் பூணோமோ? - மற்றும்
சித்தம் செயலெதும் செம்மை யுறப் பண்ணிச்
சீர்த்தியும் காணோமோ?

கங்கையில் மூழ்கிக் களிப்போர் நாம் தெய்வக்
கருணையில் மூழ்கோமோ? - மற்றும்
துங்க நல் ஞானத்துத் துய்ய அருட்கடல்
துள்ளியும் ஆழ்கோமோ?

வென்று விடுதலை கொண்டவர் தீமையும்
வெற்றி தான் கொள்ளோமோ? - மற்றும்
நின்ற பொய் வஞ்சக நீசக் குணங்களை
நீக்கவும் தள்ளோமோ?

மனையெலாம் தீப மணிவிளக் கேற்று நாம்
மனத்திலும் ஏற்றோமோ? - மற்றும்
நினைவெலாம் ஆகி, அந் நித்திய தீபத்தை
நெஞ்சிலும் போற்றோமோ?

வருடமும் தீபா வளிகொண் டாடும் நாம்
வாழ்வும் கொண் டாடோமோ? - மற்றும்
தருமமும் ஞானத் தவமும் சிறந்திடத்
தாமின்று நாடோமோ?





பெறுவீர் ஒரு

கேவார்ட்

# கேவாபாக்ஸ் காமிராவில்

## நீங்கள் எதிர்பார்க்கும் எல்லா அம்சங்களும் அதில் உள்ளன



கேவார்ட்
கேவாபாக்ஸ்
தனித் தேர்ச்சி
வாய்ந்த புகைப்
படங்களை எடுக்கும்
நற்புகழ் பெற்ற
காமிரா!

**புகைப்படங்கள்-** கேவா பாக்ஸ் ஒன்றுதான் தன்னினத்திலேயே (6 செ. மீ x 9 செ. மீ அளவுள்ள) சிறந்த நீள்சதுரப்படங்களைத்தருகிறது. மிக மேம்பட்ட என்லார்ஜ்மெண்டுகள்!

**கூடு-**கேவா பாக்ஸ் தன்னினத்திலேயே முற்றிலும் அதி நேர்த்தியான கூட்டினை உடைய ஒரே காமிரா. உடையாது, உருக்குலையாது... பல்லாண்டுகாலம் நீடித்துழைப்பது. அதுமட்டுமல்ல-எதையுமே கேவாபாக்ஸ் கொண்டு தத்ரூபமாகப் படமெடுத்து விடலாம்.

**வேகம்-**கேவா பாக்ஸில் 3 வேகநிலைகள் உள்ளன. பல்பு, வினாடியிலே 1/50 பங்கு, 1/100 பங்கு! எத்தனை நல்வாய்ப்புகள்! குழந்தைகள், செல்லப் பிராணிகள், ஆட்டத்தின் முக்கிய கட்டம், வனபோஜனம், சுறுசுறுப்பாக நடைபெறும் விருந்து ஆகியவற்றைப் படமெடுங்கள்.

**வியூஃபைண்டர்-** கணக்கான காம்பொஸிஷனோடு விருக்கென்று, எளிதில் படமெடுக்க உதவும் பளிச் சென்ற, தெளிவுள்ள விழிமட்ட வியூஃபைண்டர்.

உச்ச நிலைக்கு உயர்த்தும் கேவாபாக்ஸின் இதர சிறப்பியல்புகள்: 2 அபெர்ச்சர்கள் (f 11 மற்றும் f16) ஆழத்தைப்ஃபோக்கஸ் செய்யும் பொருட்டு குற்றம் காணமுடியாத உள்ளமைப்பு-காமிராவுக்குள் பிரதிபிம்பம் விழாது x உயர்திறத்து வடிவமுள்ள ஸ்பூல் சேம்பர்x மறிநிலைத்தகடு முழுதும் சரிசமமான பிரதிபிம்பம் விழ உறுதி செய்யும் ப்ரெஷர் ப்ளேட்டுகள்.

கேவா பாக்ஸ் இயக்க எளிதானது. ஒரு க்ளிக் அடித்தால் போதும்; மீதியைக் கேவா பாக்ஸ் முடித்து விடும். உங்கள் விற்பனையாளரைக் கேட்பீர்களானால் இயக்கிக் காட்டுவார். விலை-ரூ. 44-00.

கேவார்ட்

# கேவாபாக்ஸ்

AGI ஆக்பா-கேவார்ட் இந்தியா லிட்.
கஸ்தூரி பில்டிங், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1

Bensons/I AGIL 4 TAM



## செய்திப் படங்கள்

1. விக்யான் பவனத்தில் டிட்டோ, நாஸர், இந்திரா காந்தி மூவரும் சேர்ந்து நடத்திய பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் மூன்று தலைவர்களும் காட்சியளிக்கின்றனர்.

2. பம்பாய் பிரதம குவாஸி, மகமத் ஹாஸன் மூர்க்கே முஸ்லிம் சமூகத்தினர் சார்பாகப் புனித குர்ஆனை ஜனாதிபதி நாஸருக்குப் புதுடில்லி ராஷ்டிரபதி பவனத்தில் வழங்குகிறார்.





3. ஜனாதிபதி டிட்டோ, நேரு நினைவு மியூஸியத்துக்குத் தமது மனைவியாரோடு விஜயம் செய்தார். நேருஜியின் அலுவலக அறையில் நுழைந்ததும், தமக்கும் தமது நெருங்கிய நண்பர் நேருஜிக்கும் இடையில் ஏற்பட்ட இனிமையானதொரு சம்பவத்தை எடுத்துக் கூறுகிறார் டிட்டோ, தம் மனைவியிடம்.

4. இந்திய ராணுவத்தின் தலைமைத் தளபதி குமாரமங்கலமும், பாகிஸ்தான் தளபதி யாஹ்யா கானும் புதுடில்லியில் சந்தித்து, பாகிஸ்தான் – இந்தியா எல்லைப் பிரச்னைகள் தீர்வு குறித்து விவாதித்தார்கள்.



## அத்தியாயம் 15

மங்கா முகத்தில் அடித்தாற் போல் பேசியதைக் கண்டு, ''ஏன் மங்கா.... என் மேலே கோவமா?'' என்று கேட்டாள் வள்ளி.

''ஆமாம். கோவம்தான். நீ வீட்டுப் பக்கமே ஏன் வரலே? இந்த ஆசுபத்திரி வார்டு அவ்வளவு பிடிச்சிருக்கா உனக்கு? நான் வந்து ஒரு நிமிஷம்கூட ஆகலே, அதுக்குள்ளேயே இந்த நெடி எனக்கு வாந்தி வரப் பண்ணும் போலிருக்கே'' என்று மூக்கைப் பிடித்துக் கொண்டாள் மங்கா.

குமரன் சிரித்தான். ''டாக்டர், மங்காவின் பேச்சில் ஒளிவு மறைவுக்கே இடம் கிடையாது. வெட்டு ஒன்று, துண்டு இரண்டுதான்'' என்றான் அவன்.

''மலையில் சுத்தமான காற்றுக்கே பழக்கப்பட்ட பெண் அல்லவா? அப்படித்தான் பேசும். இதைச் சொல்லப் போவானேன்? என் மனைவி இந்த ஆஸ்பத்திரிப் பக்கம் எட்டிக் கூடப் பார்க்க மாட்டாங்க. இந்த பினேல் நெடியையும், டெட்டால் நெடியையும் ஒரு நிமிஷம் கூடத் தாங்க முடியாது அவங்களுக்கு'' என்றார் அருளானந்தம். மற்றவரிடம் தம் மனைவியைப் பற்றிப் பேசும்போது பன்மையிலேயே குறிப்பிடும் நல்ல பழக்கம் அவருக்குண்டு.

''வள்ளியக்கா! நீ சொல்லியனுப்பியிருந்தபடியே, கௌரியம்மன் கோயிலுக்குப் போயி உனக்காக வேண்டிக்கிட்டேன். பூசாரி ஐயா குங்குமப் பிரசாதம் குடுத்து அனுப்பிச்சிருக்கு.

# முள்ளும் மலரும்

### உமாசந்திரன்



கோயில்லேயிருந்து நேரே இங்கேதான் வரேன் தெரியுமில்லே'' என்று கூறிய வாறு மங்கா பிரசாதத்தை வள்ளியின் கையில் கொடுத்தாள்.

''என் மனசுப்படியே என் மங்கா நடப்பான்னு எனக்கு நல்லாத் தெரியும்'' என்று நன்றிப் பெருக்குடன் கூறி அவளைக் கட்டிக் கொண்ட வாறே வள்ளி பிரசாதத்தை நெற்றியில் இட்டுக் கொண்டாள்.

''நீ மட்டும் இட்டுக்கிட்டாப் போதாதே. உங்கண்ணனுக்கும் இட்டு விட வேண்டாமா?'' என்றாள் மங்கா.

''அது தூங்கும்போதுதான் இட்டு விடணும். முழிச்சுக்கிட்டிருக்கும்போது இதெல்லாம் கொண்டு போனால் அதுக்குக் கோபம் வந்திடும்'' என்றாள் வள்ளி.

''நல்ல அண்ணனைப் படைச்சிருக்கே, போ'' என்றாள் மங்கா.

அதே சமயம் நர்ஸ் பரபரப்புடன் வார்டிலிருந்து டாக்டரை நோக்கி ஓடி வந்தாள்.

''சார், சார்! அந்தப் பேஷண்ட் படுக்கையை விட்டு எழுந்து நடக்க ஆரம்பிச்சுட்டுது. என்ன சொன்னாலும் கேக்க மாட்டேங்குது'' என்றாள்.

''ஐயையோ! ஆபத்தாயிற்றே'' என்று கத்தினார் டாக்டர், வார்டை நோக்கி விரைந்தவாறு. மற்றவர்களும் பரபரப்புடன் அவரைப் பின் தொடர்ந்தனர்.

ஆனால் அவர்கள் வார்டை நெருங்குவதற்குள்ளேயே காளியண்ணன் தள்ளாடித் தள்ளாடி நடந்து வந்து வார்டின் நிலைச்சட்டத்தில் சாய்ந்தவாறு நின்று விட்டான். செவ்வரி படர்ந்த அவனது கண்கள் தூக்க மருந்தின் மயக்கத்தை உதறி யெறியும் முயற்சியில் சுழன்று கொண்டிருந்தன. ஒரு கேலிப் புன்னகை அவன் இதழ்க் கடையில் தேங்கி நின்றது. ''காளி, படுக்கையை விட்டு எழுந்து வர உனக்கு அனுமதி கிடையாது தெரியுமா?'' என்று அதட்டலாகக் கூறினார் டாக்டர். உண்மையிலேயே அவருக்குக் கோப மிகுதியில் கண்ணீர் பீரிட்டு விடும் போலிருந்தது.



''அனுமதி எதற்கு? உடம்பிலே வலுவிருந்தா எழுந்து வர வேண்டியது தானே?'' என்றான் காளியண்ணன் கேலிச் சிரிப்புடன்.

''தம்பி, என்ன பேச்சு இது? எவ்வளவு பெரிய கண்டத்திலிருந்து நீ பிழைச்சிருக்கே தெரியுமா?'' என்றாள் அஞ்சலையத்தை.

''தெரியும், அத்தை, தெரியும். அதுக்காக டாக்டரய்யாவுக்கு நன்றி சொல்லணுமா வேண்டாமா? டாக்டர், இந்த உடம்பு நாளுக்கு நாள் பாரியாய்க்கிட்டு வருதே, எப்படிடா குறைக்கிறதுன்னு யோசிச்சுக்கிட்டிருந்தேன். இனிமே அந்த யோசனைக்கே இடமில்லாம செய்திட்டீங்க. குறைக்க வேண்டிய விதமா இந்த உடம்பைக் குறைச்சிட்டீங்க. உங்களுக்கு எப்படி நன்றி சொல்றதுன்னே எனக்குத் தெரியலே டாக்டர் சார்.''

''காளி! இன்னும் உன் உடம்பு பலவீனமா யிருக்கு. இந்த மாதிரி எழுந்து வந்தது கொஞ்சம் கூடச் சரியில்லே'' என்றார் டாக்டர்.

''எழுந்து வந்ததினாலேதான் உடம்பு எவ்வளவு லேசாயிருக்குன்னு என்னாலே தெரிஞ்சுக்க முடிஞ்சுது டாக்டர் சார். நடக்கும்போது எப்படி இருக்கு தெரியுமா? காத்திலே பறக்கற மாதிரி. திடீர்னு எனக்கு ரெக்கை முளைச்சிடுத்தோன்னு சந்தேகம் வந்திடுச்சு. ஆச்சரியமாயிருக்கில்லே? ஒரு கை குறைஞ்சாலே இவ்வளவு கனம் உடம்பிலே குறைஞ்சு போகுதே, இந்த உடம்பே இல்லாம இருந்தால் இன்னும் எவ்வளவு இலேசாக இருக்கும்? பறந்து போறதுக்கு ரெக்கை கூடத் தேவையில்லே.''

வள்ளி அழுதேவிட்டாள். ''அண்ணே! இப்படியெல்லாம் ஏண்ணே பேசறே!'' என்றாள் விம்மலிடையே.

''பேசினா என்ன வள்ளிக் குட்டி? கை போனதைப் பத்திக் கலங்கிப் போயிடப் போறேன்னு நெனைச்சிக்கிட்டிருக்கியா? பைத்தியம், உடம்பு போறதைப் பத்தியே கலங்காதவன் ஒரு கை போனதைப் பத்தியா கலங்கப் போறேன்? இன்னொரு தடவை அந்தப் புலியே என் மேலே பாய வந்தாலும் இந்த ஒரே கையோட அதை எதிர்த்து நிக்கத் திராணியுண்டு, இந்த மனசிலே. தெரிஞ்சுக்க வள்ளிக் குட்டி, தெரிஞ்சுக்க'' என்று கூறி வந்த காளியண்ணன் திடீரென்று கீழே விழப் போவது போல் துவண்டான். சட்டென்று பாய்ந்து அவனைத் தாங்கிக் கொண்டான் குமரன்.

''காளி, இனிமே உன் உடம்பு தாங்காது. வா, படுக்கையிலே படுத்துக்க'' என்று அவனைப் படுக்கையை நோக்கி நடத்திச் சென்றான்.

காளி அவனை முறைத்துப் பார்த்தான். ''நீங்களாய்யா? இப்போ உங்க மனசு குளுந்திருக்கில்லே. உடும்புக் கொட்டகை வேலையிலிருந்து என்னை நீக்கறதுக்கு வேறே காரணமே உங்களுக்குத் தேவையில்லே, இல்லையா?'' என்றான்.

''காளி, உன் மனசு சரியாயில்லே. இந்த நிலையிலே நீ பேசாமெ இருப்பது தான் நல்லது.''

''ஆமாம், எனக்கு வாய்ப்பூட்டும் போட்டுட்டா நீங்க செய்ததெல்லாம் மறைஞ்சு போயிடும்னு நினைக்கிறீங்க. அப்படித்தானே? நீங்கதான் என்னை இந்த ஆசுபத்திரியிலே கொண்டு சேர்த்தீங்க. நீங்க சொல்லித்தான் என் கையை எடுத்திருக்காங்க. இதெல்லாம் எனக்குத் தெரியாதுன்னு நெனைக்காதீங்க. என்னென்னிக்கும் நான் இதை மறக்க மாட்டேன், ஆமாம்!''

இந்த அபாண்ட வார்த்தையைக் கேட்டு வள்ளிக்குப் பொறுக்கவில்லை.

''அண்ணே! நீ சொல்றது கொஞ்சமாவது நல்லாயிருக்கா! எப்படிப்பட்ட ஐயாவை இப்படியெல்லாம் தூக்கியெறிஞ்சு பேசறே? நீ இப்போ உயிரோடிருக்கிறதே, அந்த ஐயாவாலே தான் தெரியுமா?'' என்றாள்.

குமரன் இப்போது குறுக்கிட்டுப் பேசினான். ''வள்ளி! இந்தப் பேச்சை வளர்த்திக் கொண்டு போவதால் யாருக்கு என்ன லாபம்? காளியண்ணன் உடம்பு முதலில் குணமாக வேண்டும். அதன் பிறகுதான் மற்றதெல்லாம்'' என்று கூறியவாறே காளியண்ணனைக் கட்டிலில் படுக்க வைத்தான்.

கட்டிலில் படுத்ததும் காளியண்ணனின் பார்வை மங்காவின் மீது பதிந்தது.

''ஏது, ஏது, மங்கா கூடவா? உச்சிக் கடவிலேருந்து இவ்வளவு தூரம் என்னைப் பார்க்கவா வந்திருக்கே?''

''ஆமாம்! பார்க்கும்படியாத்தானே இருக்கே நீ! ஆசையைப் பாரு! நான் எங்க வள்ளியக்காவுக்காக வந்திருக்கேன், தெரிஞ்சுக்க'' என்று வள்ளியின் தோளையணைத்தவாறு கூறினாள் மங்கா.

''மங்கா! இனிமேல் நீ என் கைக் கடிகாரத்தை எடுத்துக்கிட்டு ஓடினா ஒண்ணும் சொல்ல மாட்டேன். கையே

போன பிறகு கடிகாரத்தைப் பற்றி பாரு கவலைப்படுவாங்க?'' என்றான் காளியண்ணன் வறட்டுச் சிரிப்புடன்.

''ஏன், அந்தக் கையில்லேன்னு வலது கையிலே கட்டிக்க. நானு கத்துக் கொடுக்கணும்?'' என்று கூறியவாறே வெளியே நடந்தாள் மங்கா.

* * *

உச்சிக் கடவுக்கு வந்து சென்றதன் ராசியென்றுதான் சொல்ல வேண்டும். சென்னை சேர்ந்த மறு வாரமே கனகாவுக்குத் திருமணம் நிச்சயமாகி விட்டது. மணமகன் சென்னையிலேயே பொறியியல் சாதனங்களைத் தயார் செய்யும் ஒரு பிரபல கம்பெனியில் எஞ்சினியராக வேலை பார்த்து வருகிறான் என்றும், கம்பெனி நிர்வாகிகளின் நன்மதிப்பைப் பெற்றிருப்பதால் சீக்கிரமே உயர்ந்த பதவிக்கு வரக் கூடியவன் என்றும் வீரமணி குமரனுக்கு எல்லா விவரங்களும் எழுதியிருந்தான். திருமணத் தேதியையும் குறிப்பிட்டு வெகு விரைவிலேயே பத்திரிகை அனுப்புவதாகவும் கலியாணத்துக்கு நாலைந்து நாட்கள் முன்னதாகவே கட்டாயம் வந்துவிட வேண்டும் என்றும் அந்தக் கடிதத்தில் கேட்டுக் கொண்டிருந்தான் வீரமணி.

நாலைந்து நாட்கள் முன்னதாகப் போக முடியாவிட்டாலும் முகூர்த்தத்துக்கு முந்திய தினத்துக்குள்ளாவது போய்ச் சேர்ந்து திருமணக் காரியங்கள் எல்லாவற்றிலும் கலந்து கொள்ள வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தான் குமரன். ஆனால் காளியண்ணனை ஆஸ்பத்திரியிலிருந்து வீட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்க்கும் வேலையையும் அவனே கவனித்துக் கொள்ள வேண்டியிருந்ததால் திருமணத்தன்று மாலையில் வரவேற்பு நேரத்துக்குத்தான் சென்னை போய்ச் சேர முடிந்தது.

அவனைக் கண்டதும் வீரமணி ஆத்திரத்துடன் அவனருகே வந்தான்.

''கனகாவின் அண்ணனா நீ... இப்படி நாலு அண்ணன்கள் இருந்தால் தங்கைகள் பிழைத்துப் போவார்கள்!''

''உனக்கு அப்புறம் சமாதானம் கூறிக் கொள்கிறேன். இப்போது நீ மற்ற விருந்தாளிகளைக் கவனி போ'' என்று அவன் தோளைத் தட்டி அனுப்பினான் குமரன்.

விருந்தாளிகளைக் கவனிக்கும் பொறுப்பிலிருந்து சற்று விடுபட்ட நேரத்தில் வீரமணி மணமகனுக்குக் குமரனை அறிமுகம் செய்து வைத்தான்.



''வாங்க! இரண்டு பேரும் நல்ல ஜோடி! ஒருத்தர் தைக்கிறவர், ஒருத்தர் கிழிக்கிறவர்!''

''கனகாவுக்கு இரண்டாவது அண்ணன் என்று ஜம்பம் பேசிக் கொள்வதில் குறைச்சல் இல்லை. ஆனால் கலியாணத்துக்கு எப்போது வந்தார் தெரியுமில்லையா? சம்பந்தம் இல்லாத மூன்றாம் மனிதர்கள்கூட இப்படி வரமாட்டார்கள்'' என்றான் வீரமணி.

குமரன் சிரித்தான். ''வீரமணிக்கு எப்போதுமே கோபம் வராது. அப்படிப்பட்டவனுக்குக் கூடக் கோபம் வரும்படி நடந்துகொண்டு விட்டேனே என்று மனத்துக்குள் கஷ்டமாயிருக்கிறது. நேற்றே வந்துவிட வேண்டும் என்றுதான் திட்டம் போட்டுக் கொண்டிருந்தேன். அங்கு எதிர்பாராமல் ஏற்பட்ட சில பொறுப்புக்களால் குறித்த நேரத்துக்கு அங்கிருந்து புறப்பட முடியாமல் போய் விட்டது'' என்றான்.

''ஆமாம், அந்த உச்சிக்கடவில் இவர் ஒரு நாள் இல்லாது வந்துவிட்டால் அந்த மலையே புரண்டு விடும் இல்லையா?'' என்றான் வீரமணி.

மணமகன் சபேசனுக்குச் சட்டென்று குமரனிடம் ஆவல் தோன்றியது.

''நீங்கள் உச்சிக்கடவிலா வேலையாயிருக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

''ஆமாம், அங்கு கருளியாறு மின்சாரத் திட்டத்தில் நான் ஒரு நிர்வாக எஞ்சினியராக இருந்து வருகிறேன்!'' என்றான் குமரன்.

''அங்கு பவர்ஹவுஸ் வேலைகளுக்கான எவ்வளவோ சாதனங்களை எங்கள் கம்பெனிதான் சப்ளை செய்து கொண்டிருக்கிறது!'' என்றான் சபேசன்.

''அப்படியா? ராம்ராஜ் கம்பெனியிலா உங்களுக்கு உத்தியோகம்?'' என்று கேட்டான் குமரன்.

''நான் உனக்கு இதைப் பற்றியெல்லாம் எழுதியிருந்தேனே!'' என்றான் வீரமணி.

''பொதுப்படையாக என்ன உத்தியோகம் என்று எழுதியிருந்தாயே ஒழிய கம்பெனியின் பெயரைக் குறிப்பிடவில்லை. இப்போது மாப்பிள்ளைக்கும் எனக்கும் உறவு முறையில் மட்டுமல்ல, உத்தியோக முறையிலும் தொடர்பு ஏற்பட்டு விட்டது'' என்றான் குமரன்.

''அதைவிட நெருங்கிய தொடர்பு ஏற்பட்டாலும் ஏற்படலாம், யார் கண்டது?'' என்றான் சபேசன்.

''எப்படி ?''

''பவர்ஹவுஸ் வேலைக்கு நாங்கள் இனிமேல் அனுப்பப் போகும் சாதனங்கள் அளவிலும் நுணுக்கத்திலும் முன்னைவிட அதிக முக்கியத்துவம் வாய்ந்தவை. அவற்றை அனுப்பிவைப்பதோடு கம்பெனியின் பொறுப்பு தீர்ந்துவிட்டதென்று சும்மா இருந்துவிட முடியாது. அவற்றை அமைக்கும் வேலையிலும் நாங்கள் பங்கெடுத்துக் கொண்டால்தான் அவை சரிவர இயங்குவதற்கு நாங்கள் உத்தரவாதம் அளிக்க முடியும். ஆகவே கம்பெனியின் சார்பில் ஓர் எஞ்சினீயரை அங்கு அனுப்பி வைப்பதற்குக் கம்பெனி டைரக்டர்கள் முடிவு செய்திருக்கிறார்கள். அநேகமாக நானே அந்தப் பொறுப்பை ஏற்கும்படி இருக்கலாம்'' என்று சபேசன் கூறியதும் வீரமணி விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்தான்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்றான் சபேசன் வியப்புடன்.

''கனகாவை நினைத்துத்தான்!''

''கனகாவுக்கும் இதற்கும் என்ன சம்பந்தம் ?''

''நீங்கள் அந்தப் பகுதிக்குப் போக வேண்டியிருக்கும் என்ற விஷயம் கனகாவுக்குத் தெரியும்போது அவள் அதை எப்படி ஏற்றுக் கொள்வாள் என்று நினைத்துக் கொண்டேன். எனக்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை!'' என்றான் வீரமணி.

''ஏன்? கனகாவுக்கு அந்தப் பகுதியைக் கண்டால் பிடிக்காதா?''

''குமரனையே கேளுங்கள். இரண்டு வாரங்களுக்கு முன்னால் அங்கேதான் போய் நான்கு நாட்கள் தங்கியிருந்தோம். முள் மேல் நிற்பது போலத்தான் துடித்துக் கொண்டிருந்தாள் கனகா !''

''ஆமாம்; கனகாவின் தவிப்பு பொறுக்க முடியாமல்தான் வீரமணி சீக்கிரமே ஊருக்குப் புறப்படும்படி ஆயிற்று. இல்லாவிட்டால் இன்னும் ஒரு வாரம், பத்து நாட்கள் என்னுடன் தங்கியிருப்பான்'' என்றான் குமரன்.

''கனகாவின் அநுபவம் அப்படி. நீங்கள் என்னடாவென்றால் கம்பெனி டைரக்டர்கள் உங்களைத்தான் அங்கே அனுப்பப் போவதாகச் சொல்கிறீர்கள்'' என்றான் வீரமணி.

''ஆமாம், டைரக்டர்கள் என்னை அனுப்பத் தீர்மானித்தால் எந்த நிலைமையிலும் மறுத்துச் சொல்ல என்னால் முடியாது'' என்றான் சபேசன்.

''விதியின் விளையாட்டு என்று இதைத்தான் சொல்கிறார்கள் போல் இருக்கிறது'' என்று நினைத்துக் கொண்டான் குமரன்.

உண்மையில் இந்த விஷயத்தில் விதி கனகாவிடம் விளையாடத்தான் விளையாடி விட்டது. திருமணத்துக்காகச் சபேசன் எடுத்துக் கொண்ட விடுமுறை தீருவதற்குள்ளேயே கம்பெனி டைரக்டர்கள் சுருளியாற்றுத் திட்டத்தின் நிர்மாண வேலைகளில் பங்கெடுத்துக் கொள்ளும் பொறுப்பை இளைஞனும், திறமைசாலியுமான சபேசனிடம் விட்டுவிட வேண்டும் என்று முடிவு செய்து விட்டனர். இந்தத் தகவலைக் குமரனுக்கு எழுதிய வீரமணி, கனகா அதை ஏற்றுக் கொண்ட விதத்தைப் பற்றியும் எழுதியிருந்தான்.

''நம்மிடம் அவ்வளவு தூரம் பிடிவாதம் பிடித்தாளே, டைரக்டர்களின் முடிவைப் பற்றிச் சபேசன் அவளிடம் தெரிவித்த போது வாயே திறக்கவில்லை. குறைந்தபட்சம் ஆறுமாத காலத்துக்காவது அங்கே வேலை இருந்துகொண்டிருக்கும் என்று கூறிய சபேசன் கனகா விரும்பினால் சென்னையிலேயே இருந்து கொள்ளலாமென்றும், ஒய்வு கிடைத்த போதெல்லாம் உச்சிக்கடவிலிருந்து சென்னைக்கு வருவது தனக்குக் கஷ்டமாயிராது என்றும் கூறினான். அதற்குக் கனகா என்ன பதில் சொன்னாள் தெரியுமா ? சபேசன் இல்லாமல் ஒரு நாள்கூட அவளால் சென்னையில் இருக்க முடியாதாம். எப்படி இருக்கிறது கதை ? இனிமேல் நானும் நீயும் வேறு தங்கையைத் தேடிக் கொள்ள வேண்டியதுதான். கனகாவுக்கு இனிமேல் சபேசன்தான் எல்லாம். இந்தப் பெண்களே இப்படித்தான் போலிருக்கிறது...

''இன்னொரு விஷயம். சபேசனும் கனகாவும் உன் வீட்டில்தான் தங்கியிருப்பார்கள். உன் சார்பில் நான் சபேசனுக்கு வாக்குக் கொடுத்துவிட்

டேன். நீ என்னைக் காலை வாரிவிட மாட்டாயென்று எனக்கு நல்ல நம்பிக்கை இருக்கிறது. கனகா இப்போது அந்த வீட்டைப் பற்றி என்ன சொல்கிறாள், பார்க்கலாம்'' என்று கடிதத்தை முடித்திருந்தான் வீரமணி.

ஓட்டுக்கூரை வீடானாலும் அந்த அணைக்கரை வீட்டில் இடத்துக்குப் பஞ்சம் கிடையாது. ஹாலைத் தவிர நான்கு பெரிய அறைகள் எல்லா வசதிகளுடனும் அதில் அமைந்திருந்தன.... கனகாவும் சபேசனும் எல்லா அறைகளையும் உபயோகித்துக் கொண்டாலும் குமரனுக்குக் கவலையில்லை. அவன் ஏகாங்கிதானே. அவனுடைய தேவைகளுக்கு அந்த ஹாலும் தாழ்வாரமுமே போதாதா! பேச்சுத் துணைக்குப் போலாக் கிழவனைத் தவிர வேறு யாருமில்லாமல் அவன் எத்தனை நாட்கள் தனித்திருக்கிறான்! புதுமணத் தம்பதிகள் அங்கு வந்து தங்கினால் எவ்வளவோ குதூகலமாகப் பொழுதைக் கழிக்க முடியுமல்லவா ?

அணைக்கரை வீட்டில் புதிய கலகலப்பு ஏற்படப் போவதைப் பற்றி அறிந்த போது போலாக் கிழவனுக்கும் சந்தோஷம் நிலைகொள்ளவில்லை. இத்தனைக்கும் கனகா முந்திய தடவை அங்கு தங்கியிருந்த நாட்களில் அவனிடம் சரியாக முகம் கொடுத்துப் பேசியதுகூடக் கிடையாது. எப்போதாவது ஓரிரு வார்த்தைகள் பேசினாலும் அதிகாரமும் அதட்டலுமாகத்தான் அவள் பேசுவது வழக்கம். அப்படியிருந்தும் இப்போது அவள் வருகையைக் குறித்துப் போலாவின் மனத்தில் குதூகலம் கலந்த பரபரப்பு நிரம்பியது. அவளுக்குத் திருமணமாகிக் கணவனுடன் வருகிறாள் என்பதில் ஒரு தனிக் கவர்ச்சி இருந்தது. மாதக் கணக்காகப் பூட்டிக் கிடப்பதே வழக்கமாக இருந்த அணைக்கரை வீட்டுக்கு இப்படியெல்லாம் யோகம் அடிக்கும் என்று அவன் எதிர்பார்த்திருப்பானா ? துருவித் துருவி ஒவ்வோர் அறையையும் ஒட்டடை போகச் சுத்தம் செய்வதும், ஜன்னல்களுக்குத் திரை கட்டுவதும் மேஜை நாற்காலிகளையும் கட்டில்களையும் துடைத்துத் துடைத்துப் பளபளப்பாக்குவதுமாகப் பம்பரம் போல் இயங்கிக் கொண்டிருந்தான் கூர்க்கா போலா.



''நம்ம பெண் சுத்த கர்நாடகமா இருக்கிறாள், துளிக்கூட நாகரிகம் போதவில்லை அவளுக்கு.''

''ஏன் அவளைக் கரித்துக் கொட்டுகிறீர்கள்? பாவம்!''

''ரமேஷை ரிஜிஸ்தர் பண்ணிக்கொண்டு விடு என்கிறேன் நான், முடியாது கல்யாணம்தான் பண்ணிக் கொள்வேன் என்று பிடிவாதம் செய்கிறாளே, பணத்துக்கு எங்கே போவேன்?''

ராம்ராஜ் கம்பெனி நிர்வாகிகள் விசேஷச் சலுகை கொடுத்துத்தான் தங்கள் எஞ்சினியரை உச்சிக் கடவுக்கு அனுப்பியிருந்தார்கள். சபேசனும் கனகாவும் ரயிலில் வருவதாயிருந்தால் டாக்டர் அருளானந்தத்தின் காரைக் கேட்டு வாங்கிக் கொண்டு விஜயபுரம் ஸ்டேஷனிலிருந்தே அவர்களைக் காரில் அழைத்து வரவேண்டும் என்று குமரன் திட்டம் போட்டுக் கொண்டிருந்தான். ஆனால் சபேசனுடைய சொந்த உபயோகத்துக்குக் கம்பெனிக் காரே கிடைத்திருந்ததால் அந்தக் காரிலேயே நேரே உச்சிக் கடவுக்கு வந்து விடப் போவதாகச் சபேசன் எழுதிவிட்டான். இருந்த போதிலும் அவர்களை எதிர்கொண்டு அழைத்து வருவதற்காகக் குமரன் வேலன்கடவுக்குச் சென்று சாலைத் திருப்பத்தில் அவர்களுக்காகக் காத்திருந்தான். அந்தச் சாலையில் மின் இலாகா ஜீப்களையும் ஒற்றை செத்தையாக ஜாமத்துக்கொருதரம் வரும் பஸ்களையும் தவிர வேறு சொந்தக் கார்கள் வருவது அபூர்வமாதலால் சபேசனுடைய காரை எடுத்த எடுப்பிலேயே அடையாளம் புரிந்து கொண்டு நிறுத்துவது குமரனுக்குச் சாத்தியமாகி விட்டது.

குமரனைக் கண்டதும் கனகாவின் முகம் மலர்ந்தது. ''என்ன குமரண்ணா! நீங்கள் இவ்வளவு தூரம் இங்கே வந்து எதற்காகக் காத்திருக்க வேண்டும்? நாங்களாக வந்து கொள்ள மாட்டோமா ?'' என்றாள். (தொடரும்)

Graphic C-2



7 நாட்களில் உங்களுடைய முகப்பருக்களை அகற்றி சருமத்தை பிரகாசப்படுத்தும்



- கிருமிநாசினி கலந்தது. டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படுவது.
- சுகந்தமான மணமுள்ளது.

# Nital

MEDICATED PIMPLE CREAM

(நிடால் முகப்பரு க்ரீம்)

விலை ரூ. 1/9பை வரிகள் தனி

மருந்து கலந்த நிடால் முகப்பரு க்ரீம் உங்கள் சருமத்தில் தோன றும் பருக்களை ஒருவித அபாயமுமில்லாமல் அகற்றி விடுகிறது. சருமத்துக்கும் பாதுகாப்பளிக்கிறது. சருமத்தின் அடித்தளம்வரை யில் இறங்கி கிருமிகளை நாசம் செய்து விடுகிறது. பருக்கள் உலர்ந்து உதிர்ந்து விடுகின்றன. சொட்டையோ, தடமோ பினபு எதுவும் இருக்காது.

யௌவனத்தின் பொலிவை மிகைப் படுத்துவதாலும், சருமத்தின் சுகாதாரத்தை அபிவிருத்தி செய்து பிரகாசப் படுத்துவதாலும் நிடால் க்ரீம் ஆணகளோ, பெண்களோ, யாவருக்கும் மிகவும் ஏற்றது

| இலவசம் | நிடாலின் விவரங்கள் அடங்கிய சிறிய புத்தகத்தை விநியோகஸ்தர்களிடம் பெறலாம். |
|---|---|

தயாரிப்போர்:
கொச்சின் பாம் பிரைவேட லிட்
நவரத்ன ஹவுஸ், மந்தரா ரோடு
கொச்சி - 2

உபயோக முறை டப்பாவிற்குள் அடங்கியுள்ளது.

சென்னை, ஆந்திரப் பிரதேசம், மைசூர் மற்றும் கேரள ராஜ்யங்களுக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்:
பி. கணபதி & கோ., 103-104, லிங்கிச்செட்டித் தெரு, த.பெ.நெ. 1986, சென்னை-1

# பேச்சும் ஒரு பாட்டுத்தான்

ஒரு கற்பூரக் கட்டியைப் பழைய பெருங்காய டப்பிக்குள் போட்டு வைத்துவிட்டு, ஆறு மாதங்கள் கழித்து டப்பியைத் திறந்து பார்த்தோமானால் பெருங்காய நெடியையும் மீறிக் கொண்டு கற்பூரத்தின் மணம் 'கம்' என்று வீசும். நாம் என்னதான் சந்தர்ப்பச் சூழ்நிலைக்கேற்ப நம்மை மாற்றிக் கொண்டாலும் நம்முடைய இயற்கையான—பரம்பரைக் குணம் நம்மை விட்டு இலேசில் போகாது என்பதற்கு இதுவும் ஓர் எடுத்துக் காட்டாகும். திரு என். எஸ். ராமசந்திரன் அவர்களைப் பொறுத்தமட்டில் இந்த நியதி நூற்றுக்கு நூறு சதவிகிதம் பொருந்தியிருக்கிறதெனலாம்.

திரு ராமசந்திரனுடைய தந்தை நேமம் நடேசய்யர் தலைசிறந்த ஒரு சங்கீத வித்துவான். மைசூர் மகாராஜாவின் அன்புக்கும் ஆதரவுக்கும் பாத்திரமானவர். இசைப் பெருங்கடலான மகா வைத்தியநாதய்யரின் அன்புக்குரிய சிஷ்யர். குருவைப் போலவே இசைப் புலமையும், குரல் வளமும், தனிப் பாணியும் கொண்டவர். அவருடைய தகப்பனாரோ — அதாவது ராமசந்திரனின் பாட்டனாரான நேமம் சுப்பிரமணிய ஐயர் — ஆடரவக் கிண்கிணியான் கோயில் கொண்டுள்ள ஆரூரில் அவதரித்துப் பாரெலாம் புகழ் பெற்ற சங்கீத ஸத்குரு ஸ்ரீ தியாகப் பிரும்மத்தின் சிஷ்யர். தமிழ் நாட்டில் மட்டுமின்றி ஆந்திரத்திலும் கேரளத்திலும் கூடத் தியாகையரின் கிருதிகளைப் பரவச் செய்ய வேண்டும் என்கிற ஆவல் மேலிட்டு, அந்தப் பகுதிகளைச் சேர்ந்தவர்களைத் தேடிப் பிடித்துப் பயிற்றுவித்த பெருந்தகை அவர்.

இசை வடிவான ஈசனைப் பாடி இசை பெற்று வாழ்ந்த பெரியவர்களின் பரம்பரையில் வந்தவரான திரு ராமசந்திரன், கல்லூரிப் படிப்பை மேற்கொண்டு, பொருளாதாரத்திலும் அரசியல் தத்துவத்திலும் பட்டம் பெற்றாலும், பரம்பரை வாசனை அவரை விட்டு விடுமா?.... கற்பூர மணம்போல் அது உள்ளுக்குள்ளேயே வாழ்ந்து கொண்டுதான் இருந்தது. பட்டத்தை வாங்கிக் கொண்டார். சூட்டோடு சூடாகச் சென்னைப் பல்கலைக் கழகத்திலேயே ஆராய்ச்சித் துறை மாணவராக அமர்ந்தார். அவர் ஆராய்ச்சிக்குத் தேர்ந்தெடுத்த துறை: சங்கீதம். இரண்டாண்டுகள் உழைத்து, 'கர்நாடக சங்கீத ராகங்கள்' என்ற அரியதொரு நூலை வெளிக்கொணர்ந்தார்.



திரு என். எஸ். ராமசந்திரன்

அப்புறம்தான் அவரை அழைத்தது அகில இந்திய ரேடியோ. 1938ம் ஆண்டில் முதல் முதலாகச் சென்னை ரேடியோ நிலையம் குரல் கொடுக்க ஆரம்பித்த போது, பின்னணியில் இருந்த முன்னணிப் பிரமுகர்களில் இவரும் ஒருவர். அந்தக் கால நிகழ்ச்சிகளில் பல இன்னும் பசுமையாக நினைவில் இருக்கின்றன இவருக்கு.

ஒரு சமயம் நாதஸ்வர சக்கரவர்த்தியான டி. என். ராஜரத்தினம் பிள்ளையவர்கள், ரேடியோ நிலையத்துக்குக் கச்சேரி செய்ய வந்த போது, அவரைச் சுற்றி ஒரே பிரகாசமாக இருந்ததாம். அந்த ஒளிவெள்ளத்துக்குக் காரணமாக இருந்தவை: அவர் அப்போது காதில் அணிந்திருந்த வைரக் கடுக்கன்கள். ''என்ன விலை இரண்டும்?....'' என்று திரு ராமசந்திரன் கேட்ட பொழுது, ''அதிகம் ஒன்றுமில்லை...பதினாலாயிரம் ரூபாய்தான்!'' என்று சர்வ சாதாரணமாகப் பதிலளித்தாராம் அந்த மேதை!

இன்னொரு சமயம் ராஜரத்தினத்தின் கச்சேரிக்கு ஏற்பாடாகியிருந்தது. அவரோ அப்போது 'காளிதாஸ்' படத்தில் நடித்துக் கொண்டிருந்தார். கச்சேரிக்கு நேரம் நெருங்கி விட்டது; வித்துவான் இன்னும் வந்த பாடில்லை. மனச்சோர்வுடன் ராமசந்திரன் ஒலிபரப்பு அறையினின்றும் வெளியே வந்த போது திடுமென்று எதிரில் வந்து நின்றாராம் ராஜரத்தினம் — காளிதாஸ் வேடத்துக்கான 'மேக்கப்'புடன். ''அன்று மேக்கப்புடனேயே கச்சேரியை வாசித்து மேக்கப் செய்து விட்டுப் போனார்!....'' என்று நினைவு கூருகிறார் திரு ராமசந்திரன்.

ரேடியோ நிலையம் ஒன்று வைத்துக் கொண்டு சும்மா பாட்டுக் கச்சேரிகளையும், பேச்சுக்களையும் மட்டும் ஒலிபரப்பினால் போதாது என்று தோன்றவே, இன்னொரு புது முயற்சியில் இறங்கினார் இவர். அதாவது பிரபல வாக்கேயகாரர்கள் இயற்றியிருக்கும் இசை நாடகங்களை ரேடியோவுக்குத் தகுந்தவாறு அமைத்துத் தருவது. இவரது முயற்சியின் பயனாக, ஜயதேவரின் கீதகோவிந்தத்தையும், தியாகராஜரின் பிரஹ்லாத பக்த விஜயத்தையும் கவிகுஞ்சர பாரதியின் வள்ளி பரிணயத்தையும் ரேடியோவில் கேட்டு இன்புறும் வாய்ப்புக் கிடைத்தது ரசிகர்களுக்கு.

சர்க்கார் உத்தியோகமென்றால் இட மாறுதல் இருந்தே தீருமல்லவா? திரு ராமசந்திரனும் திருச்சி நிலையத்துக்கு மாற்றப்பட்டார். பலதரப்பட்ட இசை நிகழ்ச்சிகளை அமைத்துக் கொடுத்துப் பண்பட்டிருந்த அவரது மனம், புதிய கோணத்தில் சிந்திக்கத் தொடங்கியது. வாய்ப்பாட்டின் மூலம்தான் உணர்ச்சிகளையும், கருத்துக்

கவிஞரும் பரிமாற முடியுமா என்ன? இசைக் கருவிகளின் மூலமும் அதையே செய்யலாமே என்று தோன்றியது. கங்கை நதி இமயமலையில் பிரம்ம கபாலத்தில் உற்பத்தியாகிப் பனி படர்ந்த மலைச் சிகரங்களினூடே தவழ்ந்து வருகையில் குதித்தும், எழும்பியும், புரண்டும், கும்மாளமிட்டுக் கொண்டு வருவதை இசை வடிவில் — ஒலிக் கோலமாக — சித்திரிக்க ஆசைப்பட்டு அது மாதிரியே செய்து பார்த்தார் — முழுக்க முழுக்க வாத்திய கோஷ்டியை வைத்துக் கொண்டே. பிரமாதமான வெற்றி கிட்டியது.

மனித வாழ்க்கையே ஒரு சக்கரம் போன்றதுதான்; உருண்டோடுவது ஒருபுறமிருக்கட்டும். இந்த நிமிடம் மேலே இருப்பது அடுத்த நிமிடம் தரையைத் தொடுகிறதே? இந்தச் சுழற்சி ஓயாமல் அல்லவா நடைபெற்றுக் கொண்டிருக்கிறது? இந்தக் கருத்தை மையமாக வைத்து ஓர் இசைச் சித்திரத்தைத் தயாரித்தார் ராமசந்திரன். அப்புறம் அவருடைய சக்கரம் சுழலக் கேட்பானேன்?......

இப்படியெல்லாம் புதுப் புது உத்திகளைப் புகுத்திப் புதுமை செய்து விடுபவர் ஒருவரைச் சும்மா உள்ளூரிலேயே விட்டு வைப்பார்களா?..... ஈழம் இரு கரம் நீட்டி அழைத்தது இவரை. கொழும்புக்குப் போய்க் கொஞ்ச காலம் தங்கியிருந்து, இலங்கை வானொலி தேசிய ஒலிபரப்பு அமைப்பில் கர்நாடக சங்கீதத்துக்கெனப் பலமான ஓர் அஸ்திவாரத்தையும் போட்டுக் கொடுத்து விட்டு வந்த இவரை, கர்நாடக சங்கீத பிரதம தயாரிப்பாளராக உயர்த்தினார்கள் தில்லியிலே. சாதாரண இசைக் கலைஞர்களிடமே பெருமளவு ஈடுபாடு கொண்டிருக்கும் இவர், இசையுலக மூதாதையரின் நினைவைப் போற்றுவதென்றால் கேட்க வேண்டுமா ?....சியாமா சாஸ்திரிகள் இருநூறாவது ஆண்டு விழா, சுவாதித் திருநாளின் நூற்றைம்பதாவது ஆண்டு விழா, புரந்தரதாஸரின் நானூறாவது ஆண்டு விழா என்று கர்நாடக இசைப் பெரியவர்களின் விழாக்களை அகில இந்திய ரீதியில் ஏற்பாடு செய்து ஜமாய்த்துத் தள்ளிவிட்டார் ரேடியோவிலே.

திருச்சி, விஜயவாடா, கோழிக்கோடு, தார்வார் ஆகிய ஊர்களிலெல்லாம் பணி புரிந்துவிட்டு டெல்லிக்குப் போன இவர், அகில இந்திய ரேடியோவிலிருந்து ஓய்வுபெற்றாலும், டெல்லி இவரை விடவில்லை. தற்சமயம் தில்லிப் பல்கலைக் கழகத்தில் கர்நாடக இசைப் பேராசிரியராக அமர்ந்திருக்கிறார் இந்த இசையறிஞர்.

வாய்ப்பாட்டுடன் வீணையிலும் தேர்ச்சி பெற்றிருக்கும் திரு ராமசந்திரன் சாகித்திய கர்த்தாவும்கூட. மும்மொழிகளில் பலதரப்பட்ட கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். தற்சமயம் ஸ்ரீ காமகோடி பீடத்தை அலங்கரிக்கும் ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளைக் குறித்து இயற்றியிருக்கும் 'ஸ்ரீசந்திர சேகர' அவற்றுள் குறிப்பிடத்தக்கதாகும்.

திரு ராமசந்திரன் அவர்கள் பாடிக் கேட்க வாய்ப்பில்லாதவர்கள், அவர் இசையைப் பற்றிப் பேசிக் கேட்டால் போதும்; பேச்சே இனிமையான பாட்டாக இருக்கிறது என்று ஒப்புக் கொள்வார்கள். — முகுந்தன்

# என் கவிதை

யோஸோனே அகிகோ (1878-1942) எழுதிய ஒரு ஜப்பானியக் கவிதை. ஆங்கிலத்திலிருந்து மயன் மொழி பெயர்த்தது.

**என் கவிதைகள்**<br>
**சுருக்கமாக இருப்பதைக் கண்டு**<br>
**நான் வார்த்தைகளில் கஞ்சன் என்கிறார்கள்**<br>
**ஆனால் நான் எதையுமே**<br>
**சொல்லாமல் விட்டு விடவில்லை—**<br>
**சேர்ப்பதற்கு எதுவுமில்லை**<br>
**மீன் போலன்றி**<br>
**இறக்கைகள் இல்லாமலே**<br>
**நான் நீந்துகிறேன்;**<br>
**ஒரே மூச்சிலே என் கவிதை**<br>
**முடிந்து விடுகிறது ..**



## வர்த்தகத் தந்திரம்

யூதர்களின் வர்த்தகத் திறமையைக் குறித்து ஓர் அமெரிக்க நகைச்சுவைத் துணுக்கு இது.

நியூயார்க்கில் ஓர் யூதக் கண்ணாடி வியாபாரி தமது மகனுக்கு வர்த்தக யுக்தி சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

''ஐஸாக்! இங்கே பார். புதுக் கண்ணாடி போட்டுக்கொள்ள ஒருவர் கடைக்கு வருகிறார் என்று வைத்துக்கொள். அவர் கேட்கிற மாதிரி 'ஃபிரேம்' ஒன்றில் கண்ணாடியைப் பொருத்திக் கொண்டு வா. அவர் எதிரே அதை மேலும் கீழுமாகப் பார். அதைச் சரி செய்வது போல் செய்து, கண்ணாடியைப் பலதடவை 'வெல்வெட்' துணியால் துடை. பிறகு மூக்குக் கண்ணாடியை அழுங்காமல் பிடித்து, வாடிக்கைக்காரரின் காதில் மாட்டிவிட்டு உன் கைக்குட்டையால் தூசியைத் தட்டிவிடுவது போல இலேசாகத் தட்டிவிடு. மூக்குக் கண்ணாடி சரியாக இருக்கிறதா என்ற பாவனையில் அவர் தம்மை நிலைக் கண்ணாடியில் பார்த்துக்கொள்ள ஐந்து நிமிஷங்கள் விட்டுவிடு. யாருக்குத்தான் தன் அழகை நிலைக்கண்ணாடியில் பார்த்துக் கொள்ள ஆசை இராது?

''ஐந்து நிமிஷங்கள் அவர் தமது அழகை ரசித்துக் கொண்ட பின் மெதுவாக அவர் பின்னே வந்து தனிவான குரலில் 'இருபது டாலர்' என்று சொல்லி நிலைக் கண்ணாடியில் அவர் முகத்தைக் கவனி.

''அவர் முகத்தைச் சுளிக்கவில்லை யென்றால்.... 'ஒவ்வொரு கண்ணுக்கும்' என்று சொல்லு. அப்போதும் அவர் முகத்தைச் சுளிக்கவில்லையென்றால், 'பிரேம் தனி - பத்து டாலர்' என்று சொல்லு. அப்போதும் அந்த ஆசாமி முகத்தைச் சுளிக்கவில்லையானால், 'பிட்டிங் சார்ஜ் பத்து டாலர்' என்று சேர்த்துக் கொள். அப்போதும் அவர் முகத்தைச் சுளிக்கவில்லையென்றால், அவன்தான் தம்பி, நியூயார்க்கிலே முதல்தர ஏமாந்த சோணகிரி. அப்புறம் அவனிடம் நீ என்னனென்ன சொல்லி என்னென்னதான் வசூலிப்பாயோ அது உன் சொந்த சாமர்த்தியத்தைப் பொறுத்தது.''

தகவல்: ஏ. கே. கந்தசாமி
ஆதாரம்: சுதந்திரன்

## யார் இந்தச் சிறுவன்?



சுவாமிநாதன் பள்ளியில் 1906 வது ஆண்டில் நான்காவது பாரத்தில் பயின்று வந்த போது, மாணவர்கள் பள்ளியின் வருடாந்திரக் கொண்டாட்டத்துக்கென ஷேக்ஸ்பியர் எழுதிய ''ஜான் மன்னர்'' என்னும் நாடகத்தை நடிக்க ஏற்பாடு செய்தனர். அந்த நாடகத்தில் ஆர்தர் இளவரசன் என்னும் முக்கிய பாத்திரத்தைத் தாங்கி நடிக்கத் தகுதியான மாணவன் கிடைக்கவில்லை. அப்பொழுது பன்னிரண்டு வயது நிரம்பிய சுவாமிநாதனின் நினைவு தலைமை ஆசிரியருக்கு வந்தது. சுவாமிநாதனின் பெற்றோர் பழைமையில் ஊறியவர்கள். புதல்வன் நாடகத்தில் நடிப்பதை அவர்கள் விரும்பவில்லை. இருந்தாலும் புதல்வனின் ஆசையைப் புறக்கணிக்க மனம் கொள்ளாமல் பின்னர் அநுமதி அளித்தனர். சொல்வன்மை படைத்த அச்சிறுவன் எல்லோரும் வியக்கத்தகுவண்ணம் மிகத் திறம்பட நடித்து நன்மதிப்பு பெற்றான். அந்நாடகத்தில் அவனுக்கே முதற்பரிசு கிடைத்தது. இந்த சுவாமிநாதன்தான் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு சங்கராசாரிய சுவாமிகள்.

ஆதாரம்: ''ஜகத்குரு திவ்விய சரிதம்''

தகவல்: எஸ். ராமு

## ஒளி இழந்தோர்க்கு ஒளி

உலகில் பார்வையற்றவர்கள் ஒன்றரைக் கோடி பேர். கண்ணொளி இழந்தவர் வாழ்விலும் ஒளி வீச முடியும் என்பதை ஆப்பிரிக்க ஜாம்பியா நாடும் இந்தியாவும் ருசுப்படுத்தியுள்ளன. ஜாம்பியாவில் பெரிய பண்ணை ஒன்றில் குருடர்கள் 27 பேர் கூடியிருந்து உழைத்ததில் ஆண்டுதோறும் கிடைத்தவை: எழுபதாயிரம் படி பால், முப்பது டன் காய்கறி, ஐம்பது டன் தக்காளி. பம்பாய்க்கு அருகே விவசாயக் கால்நடைப் பண்ணை ஒன்றைக் குருடர்களின் பொறுப்பில் டாடா நிறுவனம் நடத்துகிறது. நாட்டின் பத்து லட்சம் குருடர்களுக்கு மகிழ்ச்சி தரவல்ல நற்செய்தி இது!

— மரகதம் நாராயணன்

# நேருவின் தந்திரம்!

ஜவாஹர்லால் நேரு தமது மாளிகைக்கு வெளியில் அடிக்கடி வந்து தம்மைப் பார்க்கக் குழுமியிருப்பவர்களைச் சந்திப்பார். பேசி முடித்தபின் அவர்களிடமிருந்து தந்திரமாக விடுபடுவார். அவருடைய கைப் பிரம்பைக் கொண்டே அவருடைய அப்போதைய மன நிலையை நாம் அறிய முடியும். ஏதாவது சிந்தித்துக் கொண்டிருக்கையில் கை பிரம்பில்தான் இருக்கும். அதை அழுத்தமாகப் பிடித்துக் கொள்வார். கொஞ்சம் முன்னால் நீட்டிக் கொண்டிருக்கும் கீழ் உதடு அசைந்தால், அவர் ஏதோ தன்னுள் முணுமுணுத்துக் கொள்கிறார் என்று அர்த்தம். பிறகு பிரம்பை இன்னொரு கைக்கு மாற்றிக் கொண்டே கூட்டத்தினரைப் பார்த்து, "எங்கே இப்படி? சௌகரியம்தானே?" என்று கேட்டார். அவ்வளவுதான்! ஒரே குதூகலம் அந்தக் கூட்டத்துக்கு. அந்தச் சமயம் பார்த்துச் சிரித்துக் கொண்டே, "ஜெய் ஹிந்த்" என்று சொல்லிவிட்டு, மெல்ல நழுவி விடுவார், சிந்தனைக்குச் செயலுருவம் தர.

— தகவல்: வி. ஸ்ரீதரன்

ஆதாரம்: பி. டி. தாண்டன் எழுதிய 'விந்தை மனிதர் நேரு'

## சிரிப்புக்குப் பருவம் இல்லை!

டில்லியில் நேரு மாளிகையின் அறை ஒன்றில் 1951ம் ஆண்டு அக்டோபரில் ஒரு நாள். டாக்டர் ராதாகிருஷ்ணன் (அப்போதைய உப ராஷ்டிரபதி) சிவராவ், நிதி அமைச்சர், நீதிபதி ஒருவர், நான் ஆக ஐவர் அமர்ந்திருக்கிறோம்.

துரித நடையில் அறைக்குள் நுழைந்த நேருவின் தோளின்மீது பேரன் வீற்றிருக்கிறான்.

'இன்னும் வேகம்!' என்று தாத்தாவின் தோள் பட்டையைத் தட்டுகிறான் பேரன்.

"பார்த்தீர்களா பேரனை! என்னுடைய வேகம் போதவில்லையாம். வளரும் தலைமுறையே இப்படித்தான்!" என்று சிரித்தபடி கூறிய நேரு பேரனைக் கீழே இறக்கிவிட்டு, சோபாவில் அமர்ந்தவாறு, "இப்போது மந்திரவாதி வித்தைகள் செய்து காட்டுவார். பொழுது போகும் உங்களுக்கும்" என்றார்.

எங்கிருந்தோ தோன்றினார் மந்திரவாதி. நீளமான கத்தி பேனாக்கத்தியாக மாறிற்று. ஆரஞ்சுப் பழம் திடீரென்று பாலாக மாறியது. காகிதக் கோப்பை மறைந்த இடத்தில் கோழிக்குஞ்சு! இன்னும் பல வித்தைகள்....

பேரனுடன் நேருவும் சேர்ந்து கை தட்டினார்.

"அடுத்தது, கண்கட்டி வித்தை" என்றார் மந்திரவாதி. தமது கண்களைத் துணியால் மறைத்து முடி போட்டுக் கொண்டார்.

"ஊசலாடும் மலர்ச்செண்டுக்கு அடியில் யாராவது தயவுசெய்து நில்லுங்கள்" என்றார் அவர்.

'நிதி அமைச்சர்தான் இதற்குச் சரி' என்று நேரு கூறிச் சிரித்தார். தயங்கிய அமைச்சர் வேறு வழியின்றி செண்டுக்கு அடியில் போய் நின்று கொண்டார்.

அப்போது நேரு வேடிக்கையாகச் சொன்னார்: "நல்ல நிதி மந்திரிகள் கிடைப்பது அரிதாய் இருக்கிற சமயத்தில் இந்தச் சோதனைக்கு இவரை உள்ளாக்குவது சரியல்லதான். என்ன செய்வது?"

அமைச்சருக்கு உள்ளூற உதறல் எடுத்திருக்கும்.

கண்கட்டிய மந்திரவாதி நாணில் அம்பேற்றினார். அவர் குறி பார்த்தது நீதிபதியை!

நேரு சிரித்தார்: "நாட்டில் நீதி தழைக்க வேண்டும், ஐயா! வலப்புறமாக ஆறு அங்குலம் தள்ளும்" என்றார்.



என்ன கண்கட்டி வித்தையோ, அடுத்த கணம் விடுபட்ட அம்பு ஊசலாடும் மலர்ச் செண்டைப் பிணைத்த மெல்லிய நூல் சரங்களைத் துண்டிக்க, செண்டு அமைச்சர் முன்னால் விழுந்தது. அப்பொழுது எழுந்த கரகோஷம் மாளிகை முழுவதும் பரவியிருக்கும்.

நிகழ்ச்சிக்குப் பின் காரில் என்னை அழைத்துச் சென்ற டாக்டர் ராதாகிருஷ்ணன் சொன்னார்: "இந்த வயதிலும் நேரு இளைஞராய் இருப்பதன் ரகசியம் புரிந்தது அல்லவா? கள்ளங் கபடமற்ற இந்தச் சிரிப்புக்குப் பருவம் இல்லை!"

நார்மன் கசின்ஸ் எழுதிய "Profiles of Nehru" என்னும் நூலிலிருந்து தொகுத்தவர்: எம். ஆர். என்.

# காற்றினிலே வரும் கீதம்

ராஜ தம்பதியரை ஏற்றிக் கொண்ட பெருமையில் தேர்க் குதிரைகள் கன சந்தோஷமாக நாலு கால் பாய்ச்சலில் சென்று கொண்டிருந்தன. ஆனால் தேரில் வீற்றிருந்த ராஜதம்பதியர் தான் துணுக்குற்று மௌனமாகவே இருந்தனர்.

ஏகலிங்கர் ஆலயத்தில் மீரா பகவைக் கண்டு மயங்கியது ஏன் என்று கும்பாவுக்கு அர்த்தமாகவில்லை. மயக்கமுற்று அவள் விழுந்ததால் சுவாமி தரிசனம் செய்யாமலே வர நேர்ந்ததும் அவனது மனத்தை உழப்பியது. ஆயினும் தனது இட இயல்பைக் கொண்டு அதைச் சமாளித்துக் கொண்டான். மீரா எதற்கோ ஏங்கி வருந்துகிறாள் என்று ஊகித்த அவன் அவளிடம் வெகு வெகு இதமாக நடந்து கொள்வதே தான் செய்ய வேண்டியது என்று நினைத்தான். 'ஆனால் இதத்தையெல்லாம் தேக்கித் தான் அளித்த கோப்பையை வாங்கும் போது அந்தப் பெண்ணின் கை ஏன் அப்படி நடுங்க வேண்டும்? தன்னைக் கண்டு அவள் ஏன் அப்படிப் பயப்படுகிறாள்?'

ராணா சொல்லாமலே தேரை நிறுத்தினான் பாகன்.

''இறங்கு மீரா, கற்பின் கர்ப்பக்கிருஹத்துக்கு இப்போது செல்லப் போகிறோம்'' என்றான் மகாராணா.

கீழே இறங்கிக் கற்பின் கர்ப்பக்கிருஹத்துக்குப் போகும் வழியில் காலே வைக்கவே மீராவுக்குக் கூசியது.

எப்படியோ சுதாரித்துக் கொண்டு கணவனின் பின்னால் சென்றாள்.

பின்னால் மற்ற சுற்றத்தாரும் தொடர்ந்தனர்.

கும்பன் நடந்ததையெல்லாம் மறந்து சகஜமாகப் பேசிக் கொண்டே வந்தான்: ''மீரா, சித்தோர் ராணி பத்மினியின் புனிதப் பெயரை நீ நிச்சயம்



ரா. கணபதி

கேட்டிருப்பாய். அந்தப் பத்தினித் தெய்வத்தின் மீது அலாவுதீன் பிரேமை கொண்டதையும், அதன் விளைவாகப் பிற மத மன்னர் பிரவேசித்திராத இந்தச் சித்தோர் கோட்டைக்குள் முதன் முதலாக மிலேச்சமன்னன் படை புகுந்து போரிட்டதையும் கேட்டிருப்பாய். பத்மினி தேவி தனது பதி பீம்சிங் யுத்தத்தில் மடிந்த செய்தியை இந்த இடத்தில்தான் கேட்டாள். 'மன்னர் வீர சுவர்க்கம் எய்தி விட்டார்' என்றும் அவளிடம் சேதி சொன்னான் பன்னிரண்டு வயதுப் பாலவீரன் பாதல். 'அப்படியா, இதோ நானும் அவரிடம் போகிறேன். ஆனால் அதன்முன் ஒன்று தெரிந்து கொள்ள வேண்டும். தற்பெருமை சிறிதும் அற்ற அவர் தாம் புரிந்த போரின் பெருமையைத் தாமே சொல்லிக் கொள்ள மாட்டார். எனவே, அதை மட்டும் உன் வாயால் கேட்டு விட்டு அப்புறம் உயிர் விடுகிறேன்' என்றாள் பத்மினி. 'அதை நான் எப்படி அன்னையே முற்றிலும் கூற முடியும்? அவரது பராக்கிரமத்துக்கு இலக்கான எதிரிகளில் ஒருவர்கூட இன்று அதை நினைந்து பாராட்டவோ, பயப்படவோ மிஞ்சி நிற்கவில்லையே!' என்றான் பாதல். 'அவரது பிரேமைக்கு இலக்கான இந்த உயிர் மட்டும் எஞ்சி நிற்குமா என்ன?' என்று கூறி அக்கணமே பத்மினி உயிர் துறந்தது இதோ இந்தக் குகையில்தான்.......''

ராஜ பரிவாரம் குகையை நெருங்கியது. அமானுஷியமான ஓர் அச்சமும் பக்தியும் அந்த இறுக்கத்தில் நிறைந்திருந்தன.



ராணா கதையைத் தொடர்ந்தான்: ''சிரஞ்சீவித்துவம் வாய்ந்த சித்தோர் சாம்ராஜ்யம் மீண்டும் தலைதூக்கியது. மீண்டும் படை எடுத்தான் அல்லாவுதீன். போருக்குப் புறப்படுமுன் தேவியைப் பூஜித்தார் மகாராணா லக்ஷ்மணசிங். 'எனக்குப் பசி தாங்க முடியவில்லை; பன்னிரண்டு அரசர்களின் ரத்தத்தை நிவேதனம் செய்தால் சித்தோரைக் காத்துத் தருவேன்' என்றாள் தேவி. உடனே மகாராணாவின் பன்னிரு புத்திரர்களும், 'அப்பா! அரசு கட்டில் ஏறும் ஆசையே இல்லாதவர்கள் நாங்கள். என்றாலும் இப்போது எங்கள் பன்னிருவரையும் தலைக்கு மூன்று நாட்கள் சத்ர சாமரத்துடன் சிம்மாசனத்தில் ஏற்றுங்கள். நாங்கள் தேவி விரும்பியபடி அரசர்களாகி விடுவோம். அதன்பின் போர்க்களம் சென்று எங்கள் ரத்தத்தைத் தேவிக்குத் தத்தம் செய்வோம்' என்றனர். புளகமுற்ற மகாராணா சிறு மாறுதலுடன் அவர்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்தார். பதினொரு மக்களை அரியணை ஏற்றி அரசராக்கி அதே கையோடு களப்பலியாகக் காளிகாதேவிக்கு அளித்தார். கடைசியில் ஒரு மகனைக் கொல்லமட்டும் அவருக்கு மனம் வரவில்லை. ஒரு பிள்ளையேனும் உயிரோடிருக்கும் போது தமது கண்ணை மூட வேண்டும் என்று நினைத்தார். அஜயசிம்மன் என்ற அப்புதல்வனை வெளியிடத்துக்கு அனுப்பிவிட்டுத் தாமும் யுத்த பூமி சென்று உயிரை ஈந்தார். மேவார் சைனியம் முழுவதும் போரில் அழிந்தது. அப்போது.......''

ராணாவுக்கு மயிர்க்கூச்செறிந்தது. நாத் தழுதழுக்கத் தொடர்ந்தான்: ''அப்போது சித்தோரின் கற்பரசிகளான ஏழாயிரம் ராஜஸ்திரீகள் தங்களுடைய பதிவிரதா தர்மம் என்ற யக்ருத்தில் ஆகுதியாக எண்ணி இதே குகையிலேதான் குழுமினார்கள். குளிர்ந்த பாறுங்கற்களாக நாம் காண்கிற இதே இடத்தில்தான் பெரும் தீ மூட்டிக் கொண்டு அந்த அக்கினி வெள்ளத்தில் அவர்கள் அனைவரும் புகுந்தார்கள்.''

ராணா கைகூப்பினான். அவனது கண்களிலிருந்து கண்ணீர் கரகரவென்று வழிந்தது. சௌபாக்கியதேவியும் உதயாவும் விம்மியழும் ஒலியும் கேட்டது. கற்பரசிகளின் கதையைக் கேட்கக் கேட்க மீராவுக்குக் குற்றவாளி போன்ற ஓர் உணர்ச்சியே விஞ்சி நின்றது. மிகமிக அசக்தமான நிலையில் அருகேயிருந்த ஒரு பீடத்தின் மீது சாய்ந்து கொண்டு முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

''மீரா, வீரத்தின் விளைநிலமாகிய சித்தோரில் மயக்கமாகி விடாதே! மனத்தைக் கெட்டியாக்கிக் கொண்டு மீதமுள்ள கதையையும் கேட்டுவிடு.''

ராணாவின் குரல் ககன மண்டலத்திலிருந்து ஒலிப்பது போல் கேட்டுக் கொண்டிருந்தது.

''ஏழாயிரம் பெண் தெய்வங்கள் பிராணத்தியாகம் செய்ததைப் பற்றிக் கேள்விப்பட்டதும் அல்லாவுதீனும் அயர்ந்து விட்டான். 'நானும் என் சேனைகளும் கைப்பற்றுவதற்கு எண்ணிய பெண்கள் எவ்விடத்தில் தெய்வத் தன்மையைத் தழுவினார்களோ அந்தத் திருத்தலத்துக்குச் சென்று அவர்களது சாம்பரையாவது என் கண்ணால் காண்பேன்' என்று கூறியவாறு அவன் இந்தக் குகைக்கு வந்தான்.

''ஆனால் மீரா, சித்தோர் ராஜ ஸ்திரீகளின் கற்பு ஒரு ஜன்மத்தோடு முடிவதில்லை. ஜன்ம ஜன்மங்களுக்கும் ஒரே கணவனையே அடையும் பதிவிரதைகள் அவர்கள். அவர்களை மரணத்துக்குப்பின்கூட பிற புருஷன் அணுக முடியாது. அல்லாவுதீன் அவர்களுடைய அஸ்தியைக் காண முடியுமா? இந்தக் குகை வாயிலை அவன் நெருங்கியது தான் தாமதம், எங்கிருந்து எப்படி வந்தது என்றே தெரியாமல், ஒரு பெரிய நாக சர்ப்பம் இங்கு வந்து படமெடுத்து நின்றது. அதன் மூச்சுக் காற்றில் அல்லாவுதீனுடன் வந்த வீரர்கள் அனைத்தும் அணைந்தன. தன்னைச் சூழ்ந்த காரிருளிலிருந்து தப்பி வெளியே ஓடினான் அவன்......''

மீராவைக் காரிருள் சூழ்ந்து கொண்டது. காரிருளில் கார்வண்ணனைக் கண்டு களிப்பது அவளது பழைய வழக்கம். ஆனால் இன்று கண்ணனையும் அவள் அணுக விடவில்லை. 'சித்தோர் ராஜஸ்திரீகளின் கற்பு ஒரு ஜன்மத்தோடு முடிவதில்லை. ஜன்ம ஜன்மங்களுக்கும் ஒரே கணவனையே அடையும் பதிவிரதைகள் அவர்கள். அவர்களை மரணத்துக்குப்பின்கூடப் பிற புருஷன் அணுக முடியாது' என்ற வார்த்தைகள் அவளது சிரத்தின் மூலைமுடுக்குகளிலெல்லாம் முட்டி மோதிப் பரவி ஹாஹாகாரம் செய்தன.

''மரணத்துக்குப்பின்கூட மாதவனை நான் மணக்கக் கூடாதா?'' என்று பிரமித்த மீரா பீடத்திலிருந்து சரிந்து மயங்கி விழுந்தாள்.

## அத்தியாயம் 15

# தீபம் அணைந்தது!

ராஜ மாதா சௌபாக்கியதேவிக்கு வெறுப்பு தாளமுடியவில்லை. மீராவிடம் அவளுக்கு முதனிலேயே பிரியம் இல்லை. ஏகலிங்கர் கோயிலில் அவள் மயக்கமுற்றது சௌபாக்கியதேவிக்குப் பெரிய அபசகுனமாகத் தோன்றியதால் வெறுப்பு அதிகமாயிற்று. இப்போது மீரா மீண்டும் ஜோஹார் குகையில் ஒருமுறை மூர்ச்சித்தபோது அவளுக்கு மயக்கம் தெளிவிக்கக்கூட முயலாமல் ராஜ மாதா வாயிலுக்குச் சென்று தேரில் ஏறிக் கொண்டாள். உதயாவும் அன்னையின் அடிச்சுவட்டை அப்படியே பின்பற்றினாள்.

கும்பனேதான் மீராவின் முகத்தில் நீர் தெளித்து அவளை விழிப்புறச் செய்தான். சொல்லி முடியாத வெட்க உணர்ச்சியுடன் மீரா எழுந்திருந்தாள். அவளுக்கு ஆதர


சக்திக்கும், வலிமைக்கும்!
கோகோ
சர்க்கரை
மால்ட்
பால்
Bournvita
ஊட்டப்பொருள்கள் அனைத்தும் ஒருங்கே தேவையா? ஒரு கப் போர்ன்-விடா அருந்துங்கள். தசைகள் வளர புரதங்களும், சக்திக்கும் வலிமைக்கும் புஷ்டியான மாவுச்சத்தும், எலும்புகளை வலுவாக்க தாது உப்புக்களும், பூரண ஆரோக்கியத்திற்கு மிக்க அவசியமான வைட்டமின்களும் இதிலே உள்ளன. மிகச்சுவையாக தயாரிக்கலாம். காலையில் உற்சாகத்துடன் எழுந்திருக்க வேண்டுமா? இரவில் அமைதியாக உறங்க வேண்டுமா? போர்ன்-விடா அருந்துங்கள்.
காட்பரீஸ் போர்ன்-விடா

வாகக் கைத் தாங்கல் தந்து அழைத்துச் செல்ல அருகே வந்தான் கும்பன்.

''வேண்டாம், நான் சௌக்கியமாக இருக்கிறேன்'' என்று முறுவலித்தவாறே விடை கூறிய மீரா தேருக்கு நடந்தாள்.

மாமியும் நாத்தியும் ஆதரவாக இல்லாததற்கு ஆதங்கப்பட்ட மீரா, கணவன் இவ்வளவு ஆதரவாக இருப்பதற்கும் வியாகூலப் பட்டாள் !

சௌபாக்கியதேவியின் ரதம் இன்னும் புறப்படவில்லை.

''ஏன் அம்மா, இனி நேரே ரங்கமஹாலுக்குப் போக வேண்டியதுதானே?'' என்றான் கும்பாஜி.

ரங்கமஹால் என்றால் அரண்மனை.

''என்னை ஏன் கேட்கிறாய்? என்னைக் கேட்டால் துர்காதேவியின் மந்திரத்துக்குப் போக வேண்டுமென்றுதான் சொல்வேன். கிழங்களால் சாஸ்திரம், சம்பிரதாயத்தை விட்டுவிட முடிகிறதா? இந்தச் சித்தோர்க் கோட்டையைப் பார்த்துப் பார்த்து விஸ்தரித்தாயே! இதைக் காக்கிற அம்பாளைப் பார்க்க உனக்கே விருப்பமிருந்தால் செய். எனக்காக எதுவும் செய்ய வேண்டாம்!'' என்று பொரிந்து கொட்டினாள் ராஜமாதா.

''ஏதோ நினைவுப் பிசகில் சொல்லிவிட்டேன் அம்மா. அவசியம் துர்கா பரமேசுவரியைத் தரிசித்துவிட்டே மஹாலுக்குப் போவோம்'' என்ற ராணா, மீராவைத் தேருக்கு இட்டுச் சென்றவாறே, ''துர்கா என்றாலே 'கோட்டை' என்று அர்த்தம். சித்தோர்க் கோட்டையின் சிறப்பை நீ கேட்டிருப்பாய். ஆனால் இந்தக் கோட்டையினும் நமக்குப் பெரிய காவல் துர்காதேவியின் கிருபைதான். இந்த ஊருக்குப் புதிதாக மணமாகி வருபவர்கள் அவளைத் தரிசனம் செய்துவிட்டுத்தான் அரண்மனைக்குச் செல்வது வழக்கம். நல்ல வேளையாக அம்மா ஞாபகப் படுத்தினார். சம்பிரதாயங்களை மட்டும் மறந்துவிட்டோமோ அம்மாவுக்குத் தாங்காது'' என்றான்.

தன்னை உற்சாகமாகக் காட்டிக் கொண்ட போதிலும் கும்பராணாவின் மனத்தில் ஏதோ ஒரு குழப்பம் ஏற்பட்டிருந்தது. 'துர்காதேவியின் கோயிலில் இந்தப் பெண் என்ன செய்யப் போகிறதோ? அம்மா இன்னும் எத்தனை ஆத்திரப்படப் போகிறாரோ ?' என்று தனக்குள் கலங்கிக் கொண்டிருந்தான்.

ஃ ஃ ஃ

துர்காதேவியின் சந்நிதானம்.

இமைகளை அழிக்கத் திவ்விய ஆயுதங்கள் தாங்கி நின்ற தேவியின் திருமுகத்தில் நலன்களையெல்லாம் வளர்க்கும் கம்பீரநகை குடிகொண்டிருந்தது.

சங்கமும் சக்கரமும் தாங்கி நிற்கும் தேவியைக் காணும்போது மீராவுக்கு நாராயணனையே தரிசிப்பது போல் இருந்தது.

ஸர்வ மங்கல மாங்கல்யே சிவே ஸர்வார்த்த ஸாதிகே!<br>
சரண்யே த்ர்யம்பகே கௌரி நாராயணி<br>
நமோஸ்துதே ||

ராணாவும், அவனது அன்னையும் சோதரியும் மாவீரர் சண்டனும் மற்றும் அங்கு குழுமியிருந்த அனைவரும் பக்திபூர்வமாகத் தீர்க்கமான குரலில் கோஷித்த போது, மீராவின் இனிய குரல் அவற்றிலிருந்து தனியாக ஒலித்தது. எதிலுமே இவர்களிடமிருந்து தனித்து இருக்கப் போகிறவள் அல்லவா ? மற்றவர்கள் நிறுத்திய பின்பும் மீராவின் மதுரக் குரல் 'நமோஸ்துதே' என்பதில் நீண்டதொரு கார்வையாக நின்றது.

ராஜா மாதாவுக்கே சிறிது திருப்தி உண்டாகி விட்டது. மீராவின் குரலினிமையைப் பற்றி அவள் கேள்விப்பட்டிருந்த போதிலும் இதுவரை அவளைக் கானம் செய்யுமாறு சொல்லவில்லை.

இப்போது, ''மீரா, தேவியின் மீது ஏதாவது பாடலோ, சுலோகமோ சொல்லேன்'' என்றாள்.

கும்பனின் மனம் அந்த ஒரு கணத்தில் விரிந்து மலர்ந்தது!

ஆனால் அடுத்த கணமே அது வாடும்படி ஆயிற்று!

மீரா பாடினாள். ஆனால் என்ன பாடினாள்?

காத்யாயனி மஹாமாயே<br>
மஹாயோகின்யதீச்வரி

நந்தகோப ஸுதம் தேவி<br>
பதிம் மே குரு தே நம:

ஆயிரம், பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் குளிர் நடுக்கும் ஹேமந்த ரிதுவில், உஷத் காலத்தில் யமுனா நதிக் கரையில், மண்ணால் தேவியின் பிரதிமை செய்து வைத்து அதன் முன் நின்று கோபியர்கள் பாடிய சுலோகம் அது.

''நந்தகோபன் குமரனை எங்களுக்குப் பதியாகத் தருவாய்'' என்று மனம் குழைய, நாத் தழுதழுக்கக் கோபிகைகள் தேவியை நோக்கிக் கூறிய சுலோகம் அது.

வரதாயகியான தேவியைக் கண்டதும் தன்னையும் அறியாமலே மீராவின் உணர்ச்சி கோபியரின் உணர்ச்சியில் ஐக்கியமாகி, அவள் அந்த சுலோகத்தைக் கண்ணும் கண்ணீருமாகப் பாடிவிட்டாள்.

கண்ணனை மணக்கவேண்டுமானால் அதற்கு அவனது சகோதரியான தேவியைத்தான் பிடிக்க வேண்டும் போலும்!

ருக்மிணியைப் பரமன் கவர்ந்து சென்று கடிமணம் புரிந்ததும் அவள் தேவியின் ஆலயத்துக்குச் சென்றபோதுதான்.

ஆண்டாளோ தனது திருமணக் கனவைப் பாடும்போது, தேவியே நாத்தியாக முறை கொண்டாடிக் கொண்டு தனக்குக் கூறைப் புடவை உடுத்தியதையும், ஹாரம் சூட்டியதையும் 'மங்கலக் கோடியுடுத்தி மணமாலை அந்தரி சூட்டக் கனாக் கண்டேன்' என்று பாடியிருக்கிறாள். இதற்கு ஒரு தென்னாட்டு வைஷ்ணவ பக்தர் ராஸ்துதாவிடம் விளக்கம் சொன்னார்: 'மணமாலை என்றால் வெறும் புஷ்ப ஹாரம் மட்டுமில்லை. மங்கல சூத்திரத்தையே கோதை குறிப்பிடுகிறாள். எங்கள் பக்கத்தில் திருமாங்கல்யத்தில் கணவன் ஒரு முடிச்சுப் போடுகிறான், என்றால் நாத்தி இரண்டு முடிச்சுப் போடுவது வழக்

கம்'. மீரா கோதையாடி, கோதையின் அநுபவத்தை ஆழ்ந்து ரசித்திருக்கிறாள். மணமேடையில் தலை குனிந்து அமர்ந்திருக்கும் தன் கழுத்தைச் சுற்றி மங்கலச் சரடு கட்டிய மாதவனின் இரு கரங்கள் மாங்கல்யத்துடன் சூழ்ந்து அதனை மூடுவதையும், அவனது சகோதரி பராசக்தி, மாணிக்கப் பரல்கள் சிலம்புவது போல் கலித்துச் சிரித்தபடி மாணிக்கக் கங்கணங்கள் கலகலக்க மற்ற இரு முடிச்சுக்களைப் போடுவதையும், கோவிந்தன் அணிந்த துளசியின் மணமும் தேவி அணிந்த சம்பக, அசோக, புன்னாக, சௌகந்திக மலர்களின் மணமும் ஒன்று கலந்து தன் மீது பருமணைப் படிவதையும் மீரா எவ்வளவோ முறை மனோ ராஜ்யம் செய்து மகிழ்ந்திருக்கிறாள்.

ஏனோ, இன்று துர்கையின் சந்நிதியில் அந்த மனவெழுச்சி அவ்வளவும் திரண்டு வந்து விட்டது. பிறரைப் பற்றி நினையாமல் தாயைக் கண்ட குழந்தை போல் தேவியின் முன் உள் மனத்திலிருந்ததைக் கொட்டி விட்டாள் மீரா.

'நந்தகோபன் குமரனைப் பதியாகத் தருக' என்று அவள் துர்கா தேவியிடம் வேண்டியது சௌபாக்யவதிக்கு மிகுந்த எரிச்சலை ஊட்டிவிட்டது. அவளுக்குப் பராசக்தியைத் தவிர வேறு தெய்வத்திடம் ஈடுபாடு கிடையாது. கண்ணனையோ சற்றும் பிடிக்காது. மணமான ஒரு பெண் 'எனக்குப் பதியை அளிப்பாய்' என்று கேட்டது இவையெல்லாவற்றையும்விட அவளுக்கு வெறுப்பாயிருந்தது.

''ரங்க மஹலுக்குப் போக இருந்தவர்களை வலுக்கட்டாயமாக ஆலயத்துக்குக் கூட்டி வந்த என் புத்தியைச் செருப்பால் அடித்துக்கொள்ள வேண்டும்'' என்று சொல்லிவிட்டு, தீபாராதனைக்குக் கூடக் காத்திராமல் சந்நிதியிலிருந்து வேகமாக வெளி நடந்தாள் ராஜமாதா.

உதயாவும் அவளை விட்டு விடாமல் பின் தொடர்ந்தாள். மீராவின் இரு வேறு உலகங்களுக்கிடையே எத்துணை வித்தியாசம்! ஓர் உலகில் அன்பே உருவான அம்பிகை அவளுக்கு நாத்தி. இன்னோர் உலகில் நாக்கினால் தீ கக்கும் உதயா நாத்தி!

சௌபாக்யவதியை விட அப்போது மீராவிடம் அதிக எரிச்சலடைந்த இன்னோர் ஆன்மாவும் உண்டு.

அது மீராவேதான்!

'பத்மினியும், ஏழாயிரம் பதிவிரதைகளும் நாதனை நினைந்து உயிர்த் தியாகம் செய்த பூமியில் நின்று விட்டு, ஒரு நாழிகைக்குள்ளேயே அருகில் கணவனை வைத்துக் கொண்டு கோபாலனை மணாளனாகக் கேட்கிறேனே — நான் பாரத ஸ்திரீ பரம்பரைக்கே, ராஜஸ்தான மாதர் சமூகத்துக்கே, சித்தோர் பெண்களின் புண்ணிய குலத்துக்கே ஒரு சாபக்கேடாக அல்லவா வந்திருக்கிறேன்! தேவி, உன்னை 'த்ர்யம்பகி' என்று போற்றினோமே! அந்த மூன்று கண்களில் நெற்றிக் கண்ணைத் திறந்து என்னை எரித்து விடேன்! பரமேசுவரனை உன் தந்தை அவமதித்தான் என்பதற்காக அவனது யாக குண்டத்திலேயே விழுந்து எரிந்தவள் அல்லவா நீ! அதனால் 'ஸதி' என்றே பெயர் பெற்றவள் அல்லவா? இன்றும் அக்கினியில் மூழ்கிக் கணவனை மறு உலகில் அடைபவர்களை உன் பெயரிட்டு அல்லவா 'ஸதி' என்கிறோம்! ஸதி தேவி! நானாக அக்கினியில் மூழ்க மாட்டேன். உன் கருணையில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. நீயே என்னை எரித்துவிடு. ஸதி தேவியின் சந்நிதியில் நிற்கத் தகுதியற்ற இந்தச் சதிகாரியைப் பஸ்மீகரமாக்கிவிடு!'

மீராவின் கொந்தளித்த மனம் இவ்வளவையும் புலம்பித் தள்ளியது.

ஆயினும் வெளிப் பார்வைக்குப் பட்ட மரமாகத்தான் நின்றாள் அவள். அடிபட்டுப் பட்டே பட்டுப் போன மரமாக நின்றாள்.

அர்ச்சகர் தீபாராதனைத் தாலத்தைக் கொணர்ந்தார். ராணா தீபத்தை ஒற்றிக் கொண்ட போதே, தான் அவனது தர்ம பத்தினி என்பதைக் கெட்டிப்படுத்திக் கொண்டு மீராவும் விரைவாக அவனது கரங்களுக்கு வெகு அருகில் தன் கரங்களைப் பரபரப்பாகக் கொண்டு போனாள்.

'அன்று அக்கினி சாட்சியாகக் கைப்பிடித்தது எனக்குப் போதவில்லை. இன்று ஸதியின் சந்நிதியில் தீபாராதனை அக்கினிக்கு முன்பாக அவரது விரல்களோடு என் விரல்களையும் ஒட்டி தீபத்தை ஒற்றி அவரையே உறுதியாக மணப்பேன்' என்று சங்கற்பம் செய்து கொண்டாள் மீரா. ஆனால் பேதை மீராவின் சங்கற்பத்துக்கு மேலாகத் தெய்வ சங்கற்பம் என்று ஒன்று இருந்தது!

மீராவின் கரம் வரும் திசையை எதிர்கொண்டு, அர்ச்சகரும் அவசரமாகத் தாலத்தைக் கொண்டுவர, கிரிதரன் சந்நிதியில் கரிந்து போயிருந்த கரங்களை மீண்டும் தீக்கொழுந்து 'சுரீல்' என்று தொட்டது.

அர்ச்சகர் தாலத்தைத் தவற விட்டார். தீபம் அணைந்தது!

## அத்தியாயம் 16

# தத்தளித்த உள்ளங்கள்

சித்தோர் மாநகரத்தில் ரங்க மஹலின் உப்பரிகையில், நறுமணம் வீசும் வத்திகளின் சூழலில், புஷ்ப ஜோடனை செய்த மஞ்சத்தில் உறக்கம் கொள்ளாமல் புரண்டு கொண்டிருந்தான் மகாராணா.

காற்று வீசியது.

அருகே தட்டம் தட்டமாக வைத்திருந்த பக்ஷ்ய — போஜ்யங்களிலிருந்தும் தீங்கனிகளிலிருந்தும் ஒரு நறுமணக் கலவை எழுந்து அவனது நாசியை நிரப்பியது.

ஏனோ அதுவே அவனுக்குக் குமட்டியது. கையைத் தட்டினான்.

# தி மயிலாப்பூர் ஹிந்து சாசுவத நிதி லிமிடெட்

(ஸ்தாபிதம் 1872)

போன்: 71090 - 71099

கிளை:
471, தங்கசாலைத் தெரு
பார்க் டவுன், சென்னை

பதிவு செய்யப்பட்ட காரியாலயம்:
30 & 31, தெற்கு மாட வீதி
மயிலாப்பூர், சென்னை - 4

இத் தீபாவளி நன்னாளில் அனைவருக்கும் எமது உள்ளம் கனிந்த வாழ்த்துக்கள்

ரெக்கரிங் டிபாஸிட்டுகள்: 45 மாதங்களுக்கும் 84 மாதங்களுக்கும் அதிக வட்டி விகிதத்தில் ஏற்றுக் கொள்ளப்படும்

பிக்ஸட் டிபாஸிட்டுகள்: 6 சத விகித வட்டியில் ஒரு வருஷத்துக்கோ அல்லது இரண்டு வருஷங்களுக்கோ பங்குதாரர்களிடமிருந்து ஏற்றுக் கொள்ளப்படும்

(மறு அறிக்கை வரும் வரையில்)

ஜி. ஜானகிராம் செட்டியார்
தலைவர்

யு. எஸ். ராமஸ்வாமி ஐயர், எம்.எல்.
உதவித் தலைவர்

கே. விநாயகம், பி.ஏ., பி.எல்., காரியதரிசி



## பாப்பா

நாம் என்ன சின்ன பாப்பாவா? எது கெட்டது, எது நல்லது என்பது நமக்குத் தெரியாதா என்ன? இந்த கஷ்டமான காலத்தில் கண்டதையும் வாங்கி பணத்தை வீணாக்காமல், சிறந்த பொருளையே வாங்கி பணத்தை மிச்சப்படுத்தலாமே!

**தலைவலி, ஜலதோஷம்
புளு, கைகால் வலி**
முதலியவைகளுக்குச் சிறந்தது

# ஆர். எஸ். பதி மருந்து (REGD.)

தயாரிப்பவர்கள்: **ஆர். எஸ். பதி அன் கோ.**

த. பெ. எண் 99 (ஸ்தாபிதம்: 1909) மதுரை - 1

தாஜ் பப்ளிஸிட்டீஸ்

இடது காலில் வெள்ளித் தடயம் பூண்ட கோலா எனப்படும் இரண்டு அடிமைகள் ஓடி வந்தனர்.

''இந்தப் பட்சணம், பழம், பால் எல்லாவற்றையும் எடுத்துப் போங்கள். கட்டிலில் சுற்றியிருக்கும் பூச்சரங்களையும் பிரித்துக் கொண்டு போங்கள் — ஒரேயடியாகத் தலை வலிக்கிறது'' என்றான் மகாராணு.

கோலாக்கள் மறு பேச்சின்றி ஒரு நொடியில் ராவல்ஜியின் உத்தரவை நிறைவேற்றி வைத்தார்கள்.

வெளியே வந்தவுடன் அவ்விரு அடிமைகளும் ஒருவரை யொருவர் பொருள் புதைந்த வாறு பார்த்துக் கொண்டனர்.

'புதிய மகாராணி சாகேபாவை ஏன் காணவில்லை?' என்பதுதான் அந்தப் பார்வையின் பொருள்.

வெறித்துக் கிடந்த பிறிதொரு மஞ்சத்தைப் பார்க்கக் கூட இல்லை மகாராணு. அவன் முப்பத்தெட்டு வயசு நிரம்பியவன். மனத்தை அதிகம் ஆடாமல் அடக்கத் தெரிந்தவன். எனவே தனிமை அவனை விசேஷமாக வதைத்து விடவில்லை.

அந்தத் தனிமைக்கும் அவனேதான் காரணம். மீரா அன்று நீண்ட பிரயாணத்தில் களைத்து, இரண்டு முறை மயக்கம் அடைந்திருந்ததால், அவளை ராஜஸ்திரீகளின் காப்பில் இரவு விடுவதே உத்தமம் என்பது அவனுகச் செய்த முடிவுதான். அதுவே சௌபாக்கிய தேவிக்கும் திருப்தியாக அமைந்ததில் அவன் நிறைவு கண்டான்.

ஆயினும் அவன் உறக்கம் கொள்ளாமல் தவித்தது ஏன்? அவனுக்கே புரியவில்லை. மீராவை ஏதோ ஒரு மர்மம் சுற்றியிருப்பது போல் அவனுக்குத் தோன்றியது. 'அவளோடு ஏன் என் வாழ்வைப் பிணைத்துக் கொண்டேன்! ஆஹா, சம்பவங்கள்தாம் எவ்வளவு வேகமாக ஓடி விட்டன! மேர்தாவில் கண்ணன் கோயில் வாயிலில் அவளைக் கண்டது நேற்றுப் போலத்தான் இருக்கிறது! அன்று சுவாமி சந்நிதியில் தன் மனத்தில் தாம்பத்திய எண்ணம் எப்படி உதித்தது! அன்று புலிமீது அம்பெய்து நான் அவளைக் காத்தது கூடத் தெரியாமல் கண்ணனிடமே நினைவை வைத்து எத்தனை பக்தியாக, சோகமாக நின்றாள்? அந்த பக்தியை, அந்த சோகத்தை இல்லறத்தில் இணைக்க வேண்டும் என்ற இழிந்த எண்ணம் எனக்கு எப்படி உண்டாயிற்று? இது ஆண்டவன் சித்தம் என்று வேறு பழியைப் பகவான் மேல் போட முனைந்தேனே, அந்த சனத்தனத்தை என்னென்பது! நான் மகா வீரன் என்று பாரெல்லாம் புகழுகிறது. ஆனால் நான் எத்தகைய பலவீனமானவன்? அந்தப் பலவீனத்துக்குத்தானே இந்தப் பெண்ணைப் பலியாக்கிக் கொண்டேன்? அடுத்த முறை மீராவைப் பார்க்கும்போது சொல்ல வேண்டும்: 'என்னைக் கண்டு நீ பயப்படாதே. பலவீனனைக் கண்டு யாராவது பயப்படுவார்களா? நான்தான் உன்னைக் கண்டு அஞ்ச வேண்டும் — அதாவது உன் பக்திக்கும் சோகத்துக்கும் என் அச்சத்தை அளிக்க



''நான் பகலில் சாப்பிடுவதில்லை. இரவில் தூங்குவதில்லை என்று ஒரு விரதம் எடுத்தேன்!''

''அது நடக்கவில்லை என்று உங்கள் வயிற்றைப் பார்த்தாலே தெரிகிறது.''

''நல்லா நடக்கிறது! இரவில் சாப்பிட்டு விட்டுப் பகல் முழுதும் தூங்குகிறேன்!''

வேண்டும்' — இவ்வாறு மீராவிடம் சொல்ல வேண்டும்...'

அறைக் கதவின் கீல்கள் கிறீச்சிட்டன.

முன்னறிவிப்பின்றித் தன் அறையில் யார் நுழைவது?

ஆகா, யார், மீராவா?

கட்டிலிலிருந்து குதித்து எழுந்தான், கும்பா. ''வா, மீரா! உனக்கு ஓய்வு தேவைப்படும் என்று நினைத்தேன்'' என்றான்.

''ஓய்வா? உங்களுக்கு உடல் நலம் சரியில்லாதபோதா? தலைவலி எப்படியிருக்கிறது?'' என்றபடி அவனருகே வந்தாள் மீரா.

ராணுவுக்கு அதிசயமாகி விட்டது! தனியாகத் தன்னைத் தேடி நள்ளிரவில் வந்ததோடு, எத்தனை கனிவோடு, வாஞ்சையோடு, விசாரத்தோடு கேட்கிறாள்! அவளாக வாய் திறந்து தன்னிடம் பேசுவது இதுவே முதல் தடவை. ஆயினும் எத்தனையோ ஆண்டுகள் பழகியது போல் சகஜமும் அல்லவா தொனிக்கிறது? முன்பு இவளிடம் கண்ட, அச்சம், நாணம் எல்லாவற்றுக்கும் மேலாகக் கற்பு அல்லவா இப்போது இடமாகத் தின்னிய குரலில் பேசுகிறது!

இதுகாறும் ஏதோ ஓர் ஐயத்தைக் கும்பாஜி பிடிவாதமாகத் தன் மனத்தின் அடித்தளத்திலேயே அமுக்கிக் கொண்டிருந்தான். அது சிறிது தலை தூக்க முயன்றாலும் அதை மிதித்துத் தரை மட்டமாக்கிக் கொண்டிருந்தான்.

இப்போது மீராவின் பரிவும், அங்கலாய்ப்பும் நிறைந்த குரலைக் கேட்டபோதுதான் ராணுவுக்குத் தெளிவு பிறந்தது. தன் மனத்தின் அடி ஆழத்தில் கூட அந்த ஐயம் தோன்றியிருக்க வேண்டிய அவசியமே இல்லை என்று நினைத்தான். மீராவை மணந்ததில் தான் செய்த தவறு இப்போது அவனுக்குப் பெரிதாகவோ, பச்சாதாபப்பட வேண்டிய ஒன்றாகவோ தோன்றவில்லை.

கும்பா சயனத்தில் சாய்ந்தான். மீரா அருகே அமர்ந்தாள். என்றாலும் எதுவோ ஒன்று அவன் தலையை அவள் பிடித்துப் பார்க்கவொட்டாமல் தடுத்தது.

''எனக்குத் தலைவலி என்று யார் சொன்னது?'' என்று கேட்டான் ராணா.

''கோலாக்கள் பேசிக் கொண்டிருந்து தெரிந்தது.''

''இங்கே நான் கோலாக்களிடம் சொன்ன விஷயம் அம்மாவின் அரண்மனை வரையில் எப்படி அதற்குள் பரவியது?''

''விஷயம் பரவவில்லை. நானே இங்கே வந்தேன். கோலாக்கள் பக்ஷணங்களையும் புஷ்பங்களையும் எடுத்துப் போவதைப் பார்த்து ஏனென்று கேட்டேன். அவர்கள்தான் உங்களுக்குத் தலைவலி என்று சொன்னார்கள்.''

'தனக்குத் தலைவலி என்று தெரியுமுன்பே அவள் தன்னை நோக்கி வந்திருக்கிறாள்' என்பது ராணாவின் உள்ளம் முழுவதையும் வியாபித்தது. தன்னுடைய நயத்துக்கு இம்மியும் முகாந்திரம் இல்லை என்பது அவனுக்கு மேலும் உறுதியாயிற்று.

''இப்போது எப்படி இருக்கிறது?'' என்று இதமாகக் கேட்டாள் மீரா.

''நீ வந்தவுடனேயே அது 'அடாடா, இந்த மகாராணாவிடம் இனி நம் கைவரிசையைக் காட்ட முடியாது. இவரைக் காப்பாற்ற ஒரு மகா சக்தி வந்து விட்டது' என்று நினைத்து ஓட்டமாக ஓடிவிட்டது.''

'கலகல'வென்று சிரித்தான் கும்பன்.

''அப்படி இருக்காது. 'இவள்தான் ஒருத்தி ராவல்ஜிக்கு நிரந்தர உபத்திரவமாக வந்திருக்கிறாளே, நாம் வேறு ஏன் அவரைப் பிடிக்க வேண்டும்?' என்றுதான் ஓடிவிட்டதோ, என்னவோ?'' என்று கூறிவிட்டுச் சலசலவென்று மீராவும் சிரித்தாள்.

''மீரா, நீ இங்கே ஓடிவந்து விட்டாயே! நாளைக்கு உன்னை அம்மாவும், உதயாவும் கேலி செய்வார்கள் என்பதை மறந்து விட்டாயா?''

'கேலி செய்வது' என்றுதான் ராணா 'மரியாதை'யாகக் குறிப்பிட்டான். உண்மையில் அவர்கள் மீராவின் துணிச்சலையும், அடக்கமின்மையையும் குறித்து ஏளனம் செய்து எக்காளமிடுவார்கள் என்பது அவனுக்குத் தெரியும். மீராவுக்கும் அது தெரிந்ததுதான்.

ஆயினும் அவள் அவனிடம் ஓடி வந்திருந்தாள்!

கல்லையும் இரும்பையும் விடக் கனமான ஏதோ ஒன்றாக மனத்தை இறுக்கிக்கொண்டு தனது கிருஷ்ணப் பிரேமை அவ்வளவையும் தவிடுபொடி செய்து விட்டு அவள் அங்கு வந்திருந்தாள் — ராஜஸ்தான ஸ்திரீகளின் பதிவிரதா தர்மத்தைப் பின்பற்றுவதற்காக.

மீரா தன் கையைத் தட்டினாள்.

கோலாக்கள் உள்ளே ஓடி வந்தார்கள்.

''பழவகைகளும், பட்சணங்களும், பாலும் கொண்டு வாருங்கள்'' என்றாள்.

அவளது குரலிலிருந்த மிடுக்கும் அழுத்தமும் ராணாவை அயர வைத்தன. 'தன்னோடு தேரில் வந்த அதே பெண்ணா இவள்! அடேயப்பா! பெண்கள் எவ்வளவு அதிசயமானவர்கள்!'

'முன்பு பழரசக் கோப்பையைத் தான் தந்தபோது தவற விட்டாள்! இப்போது பால் நிறைந்த கோப்பையில் வாழ்வின் இன்பத்தைத் தேக்கித் தந்து ஈடு செய்வேன்' என்று எண்ணியவாறு கண்களை மூடிக் கொண்டான்.

''ஏன் கண்ணை மூடிக் கொண்டு விட்டீர்கள்? என்னைப் பார்க்கப் பிடிக்கவில்லையோ?''—எவனது கண் பார்வையை ஒரு காலத்தில் புலியின் வாய்க்குச் சமமாக நினைத்தாளோ அவனிடமேதான் மீரா கேட்டாள்.

''நல்ல கேள்வி கேட்டாய். உன்னைப் பார்க்கும்போது இப்படி ஓர் அற்புதப் பெண்ணை நனவுலகில் பார்க்க முடியாது; கனவில்தான் பார்க்க முடியும் என்று தோன்றுகிறது. கண்ணை விழித்துக் கொண்டிருந்தால் கனவு எப்படித் தோன்றும் என்பதால் மூடிக் கொள்கிறேன்'' என்று நயமாகச் சொல்லிக் கண்களை மூடினான் கும்பாஜி.

மெல்லிய காற்று வீசிற்று. ''மீரா, இந்தக் காற்று வீசும் ரம்மியத்துக்கு உடம்பில் சந்தனம் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? நல்ல வேளையாக சந்தனப் பியாலாவை கோலாக்கள் தூக்கிப் போகவில்லை.''

கும்பனின் உள்ளக் கருத்தைப் புரிந்து கொண்டாள் மீரா. தானே சந்தனக் கிண்ணத்தைக் குனிந்து எடுத்தாள். அவள் குனிந்தபோது தலையில் வைத்திருந்த ஒரு பூச்சரம் முன்னால் அவன் மேனியில் விழுந்து உரசிற்று. ஏனோ, பண்டைய நினைவுகள் பேதை மீராவுக்குக் குபுகுபுவென்று வந்தன. கண்ணன் அவளுக்கு மணமாலையாகத் துளசிச் சரத்தைச் சூட்டியபோது அது இவ்விதந்தானே உடலில் உரசிற்று! அப்புறம் அதே மணமாலையைக் கண்ணனின் மேனியை வளைத்துக் கட்டினாளே அவள்; அப்போது அவனது திருமார்பைச் சுற்றியிருந்த சரத்தின் முனைகள் இவள் கையிலிருக்க அந்தச் சரத்தின் வழியாகவே அவனது மேனியின் கோமளம் இவள் கைகளில் பாய்ந்ததே! அதோடு உலகின் துயரையெல்லாம் தாங்கும் அவனது இதயத்தின் துடிப்பைக்கூட அந்த ஹாரத்தின் வழியே உணர்ந்தாளே!

'அம்மம்மா! அந்த வக்ஷஸ்தலத்தின் ஸ்பரிசத்தை அநுபவித்து விட்டு...இன்று...!'

தீப்பட்ட மீராவின் விரல்கள் சந்தனச் சாற்றுக்குள்தான் இருந்தன. ஆனால் அவள் மனத்தில் அடைத்துக் கொண்டிருந்த கல்லும் இரும்பும் உருகி விட்டதால் தீயைக் காட்டிலும் இச்சந்தனக் குழம்பு விரல்களை எரித்தது.

மீராவால் தாங்கவே முடியவில்லை. அவளது உதரத்தின் அடியிலிருந்து நாறாயிரம் பந்துகள் புறப்பட்டுப் பம்மிக்கொண்டும், விம்மிக் கொண்டும் மேலே எழும்பின.

'மீராவின் தண்ணென்ற கை தண்ணென்ற சந்தனத்தை அப்பப்போகிறது'—என்ற கண்களை மூடிக்கொண்டு ஆசையோடு எதிர்பார்த்திருந்தான் ராணா.

டப் டப் டப்! துளித் துளியாக விழுந்தது! 'ஆனால் இவை ஏன் வெப்பமாக இருக்கின்றன!' கும்பன் கண்களைத் திறந்தான்.

சந்தனக் கிண்ணத்தில் விட்ட கை ஸ்தம்பித்து நிற்க, அவனது மேனிக்கு மீதாக மாலை மாலையாகக் கண்ணீர் விட்டபடி அமர்ந்திருந்தாள் மீரா. **(தொடரும்)**




திருமுருக கிருபானந்த வாரியார்

# 29. திருநாளைப் போவார்

திருத்தொண்டர் புராணத்துள் இசைத் தமிழில் வல்லவர் நால்வர். அவர்களுள் திருநாளைப் போவார் ஒருவர். ஆனாய நாயனார், திருநீலகண்ட யாழ்ப்பாணர், பரமனையே பாடுவார் என்பவர்கள் ஏனைய மூவர். திருநாளைப் போவாரின் இயற் பெயர் நந்தனார் என்பது. தில்லையம்பலத்தின் மீது தணியாக் காதலுடன், ''நாளைப் போவேன்'', ''நாளைப் போவேன்'' என்று கூறிக் கொண்டிருந்ததனால் திருநாளைப் போவார் என்று அவர் திருநாமம் பெற்றார்.

மேற்கானாடு சோழவள நாட்டின் உட்பிரிவுகளில் ஒன்று. பொன்னையும் நன்மணிகளையும் கொள்ளிட நதியின் அலைகள் தர, தாமரை தடக்கை நீட்டி வாங்கும் வயல்களுடன் கூடிய பழைமையான வளம்பதி ஆதனூர். கொள்ளிடக் கரையில் திருநீற்றின் ஒளிவிளங்கத் திகழ்வது அத்திருப்பதி. வானளாவிய இருண்ட சோலைகள் அவ்வூரைச் சுற்றி இருந்தன. அச்சோலைகளின் பூமரங்களில் தேன் வண்டுகள் இனிது பண்ணிசை பாடத் தேன் மழையோ, வான் மழையோ ஒழியாது பெய்யும். தென்னை பழுத்து உதிரும்; பலாப் பழங்கள் முதிர்ந்து வெடித்துச் சாறு ஒழுகும்.

வயல் வளமும் செயல்படுந் தோட்ட வளமும் பெருகத் திருமகள் வாழும் அவ்வாதனூரில் மேகங்கள் தவழும் மாடங்கள் நிறைந்து மக்கள் பெருகி வாழ்ந்தனர். இத்தகைய ஆதனூருக்கு அருகில் ஒரு புலைப்பாடி. வயல்கள் சூழ்ந்துள்ள அதில் உழவர்களாகிய பறையர்கள் நெருங்கி வாழ்ந்தனர். அவர்கள் வாழ்கின்ற குடிசைகள் யாவும் பழைமையான கூரை வீடுகள்; அக்கூரையாலான குடில்களின் மீது சுரைக் கொடி படர்ந்திருக்கும். ஒவ்வொரு குடிசைக்கும் முன் கோழிக் குஞ்சுகள் தாய்க் கோழியுடன் சுழன்று சுழன்று உலாவும். இரும்புக் காப்புகள் அணிந்த கரிய சிறுவர்கள் நாய்க் குட்டிகளை எடுத்துக் கொண்டு ஓடுவர். அக்குட்டிகளின் சத்தத்தை அவர்கள் இடையில் அணிந்துள்ள இரும்பு மணிகளின் சத்தம் அடக்கும். மருத மர நிழலில் தோல் விரிப்பின் மீது குழந்தைகள் தூங்கும். முட்டைகளைக் கோழி அடை காக்கும் பொருட்டு ஒடுங்குவதற்கு இடமாக வஞ்சிமர நிழலில் பெரிய பானைகளைப் புதைத்திருப்பர். பறை வாத்தியங்களை மாமரங்களில் தொங்க விட்டிருப்பர். தென்னை மரங்களின் அடிப் பொந்துகளில் நாய்க் குட்டிகள் தங்கியிருக்கும். வைகறை யாமத்தில் சேவல்கள் கூவும். காஞ்சி மர நிழலில் பறைச்சியர் இனிது பாடிக் கொண்டே நெல் குத்துவர். நெற்கதிர்களைக் கூந்தலில் முடித்த அப்புலை மகளிர் கள்ளுண்டு ஆடுவர். அதற்கு ஏற்பப் புலையர் பறை கொட்டுவர். பறை கொட்டுவதாலேயே அவர்கள் பறையர் என்று பெயர் பெற்றிருந்தனர்.

சேக்கிழார் பெருமான் சோழமன்னனிடம் முதன்மந்திரிப் பதவியில் இருந்த



வர். மிகவும் மேலான நிலையில் இருந்த அவர் மிகவும் கீழான நிலையில் இருந்த புலைப்பாடியின் இயல்புகளை நமது மனக் கண் முன்னால் படம் பிடித்துக் காட்டுவது போல் கூறும் திறம் வியத்தற்குரியது.

இத்தகைய புலைப்பாடியில் சிவபெருமான் திருவடியில் நீங்காத அன்புடன் நந்தனார் என்பவர் இருந்தார். அவர் ஊர்த் தோட்டிமைத் தொழில் புரிந்து அதனால் தமக்கு விடுத்த மானியத்தில் வாழ்ந்தார்.

**பிறந்துணர்வு தொடங்கியபின்**
**பிறைக்கண்ணிப் பெருந்தகைபால்**
**சிறந்தபெருங் காதலினால்**
**செம்மைபுரி சிந்தையராய்**
**மறந்தும்அயல் நினைவின்றி**
**வருபிறப்பின் வழிவந்த**
**அறம்புரிகொள் கையராயே**
**அடித்தொண்டின் நெறிநின்றார்.**

பக்தியே முத்தியைத் தரும். ''ஆன பயபக்தி வழிபாடு பெறுமுத்தி யது வாக நிகழ் பக்தஜனவாரக்காரனும்'' என்பார் அருணகிரிநாதர். பல பிறப்புக்களில் புரிந்த நற்றவப் பயனாக நந்தனார் உணர்வு தோன்றிய நாள் தொட்டுப் பிறை மதியணிந்த பெருமான்பால் சிறந்த பெருங்காதலுடன் செம்மையை விரும்பும் சிந்தையராயும், மறந்தும் வேறு நினைவு இல்லாமல், தாம் பிறந்த மரபுக்கு ஏற்றவாறு சில தருமங்களைப் புரியத் திருத்தொண்டில் ஈடுபடுவாராயினர்.

வைத்தீச்சுரன் கோயிலுக்கு மேற்கே இரண்டு கல் தொலைவில் உள்ளது திருப்புன்கூர். அங்குள்ள சுவாமியின் பெயர் சிவலோகநாதர். புன்கு மரத்தின் கீழ் சுவாமியிருப்பதனால் திருப்புன்கூர் என்ற பேர் அத்தலத்துக்கு உண்டாயிற்று. திருப்புன்கூரில் எழுந்தருளியுள்ள சிவலோகநாதரைச் சேவிக்க வேண்டும் என்று காதல் கொண்டார் நந்தனார். மிகுந்த அன்புடன் திருப்புன்கூர் சென்ற நந்தனார் திருவீதியை வலம் வந்து திருக்கோயிலுக்குமுன் கோபுர வாயிலில் நின்றார். அங்கு திருநந்தி தேவர் சிறிது உயரம். அதனால் சிவலிங்கத்தைத் தரிசிக்க முடியவில்லை. நந்தனார் மிகவும் வருந்தினார். அன்பரது வருத்தத்தை அகற்றக் கருதிய இறைவர் நந்தி தேவரை விலகும்படி செய்து நந்தனாருக்குக் காட்சி யளித்தார். எம்பெருமானைக் கண்டு களிகூர்ந்த நந்தனார் பாடியாடினார்; தொழுதார்; அழுதார். திருக்கோயிலுக்கு மேற்புறத்துள்ள பள்ளத்தைக் குளமாக வெட்டினார். சடைமுடியில் கொன்றை மாலையணிந்த பெருமானது திருக்கோயிலை வலமாக வந்து வணங்கி விடைபெற்றுக் கொண்டு ஆதனூரை அடைந்தார். நந்தனார் வெறும் பக்தி மட்டும் புரிந்ததோடு அமையாது சிவ தலங்கள்தோறும் சென்று தோல், வார், நரம்பு, கோரோசனை முதலிய பொருள்களைத் தமது தகுதிக்குத் தக்கவாறு தந்து சிவதருமம் புரிந்து வந்தார். தமது குலமரபு நெறி தவறாது திருக்கோயிலின் புறத்தே நின்று ஆடுவதும் பாடுவதுமாகத் திருத்தொண்டு புரிந்தார்.

திருத்தலங்களுக்குள் முடிமணியாக விளங்குவது திருத்தில்லை. தரிசித்தார்க்கு வீடு பேறு தரவல்லது. தில்லைச் சிதம்பரம் என்று ஒன்று உண்டு என்று கேள்வியுற்ற நந்தனாருக்கு, கனகசபையில் ஆனந்தத் தாண்டவம் புரியும் அம்பலவாணரைச் சேவிக்க வேண்டும் என்ற காதல் உதித்தது. கரை கடந்த வெள்ளம் போல் பெருகிய காதலால் அன்றிரவு கண்ணுறங்காது தில்லையம்பலத்தையே நினைந்து நினைந்து உருகினார். ஆனால் தமது குலம் கோயிலுட் புகுந்து தரிசிக்கத் தடையென்று கருதினார். ''தான் தில்லைத் தலம் போவது தகாது'' என்று



கருதினார். அவ்வாறு தோன்றிய எண்ணமும் எம்பெருமான் ஏவலே என்று நினைந்தார். அவர் உள்ளத்து எல்லையின்றி எழுந்த அன்பினால் பலகாலும், ''நாளைப் போவேன்'' என்பார். இதனால் 'திருநாளைப் போவார்' என்றே பெயர் பெற்றார்.

> அன்றிரவு கண்துயிலார் ;
> புலர்ந்ததற்பின் 'அங்கெய்த
>
> ஒன்றியணை தருதன்மை
> உறுகுலத்தோ டிசைவில்லை'
>
> என்'றிதுவும் எம்பெருமான்
> ஏவல்'எனப் போக்கொழிவார் ;
>
> நன்றுமெழுங் காதல்மிக
> ''நாளைப் போவேன்'' என்பார்.

இவ்வாறாகப் பல நாட்கள் கழிந்தன. நந்தனார் உள்ளத்து ஒரு நாள் காதல் வெள்ளம் கரையின்றிப் பெருகியது. தம் ஊரினின்றும் புறப்பட்டுத் தில்லைச் சிதம்பரத்தின் அருகில் வந்தார். தில்லையின் எல்லையை வலம் வந்து பணிந்து எழுந்தார். வேள்விப் புகையும் வேத வோசையும் மிகுந்த அத்திருத்தில்லைக் குள் நுழைவதற்கு அஞ்சினார். 'அந்தோ! புலைக் குலத்திற் பிறந்த எளியேன் எவ்வாறு தில்லைக்குள் சென்று சிற்சபையைச் சேவிப்பேன்?'' என்று கண்ணீர் வடித்துக் கீழே விழுந்து புரண்டார். தில்லை நகரை வலம் வந்தவண்ணமாகவே இருந்த அவர் கரையில்லாத காதலுடன் தென்மதில் வாயிலையடைந்தும் உள்ளே நுழையாது அகங் குழைந்து முகமெல்லாம் கண்ணீரினால் நனைய அழுதார்.

''அம்பலவாணா! அருட்பெருங் கடலே! தில்லை மேவுந் தேவ தேவா! ஞானமூர்த்தி! நாயினேன், உனது மணி மன்றம் வந்து கண்டு களிக்கும் பேறு பெற்றேனில்லையே ? என் செய்வேன்? எம்பெருமானே! கருணாநிதி! உம்மைக் காணவும், தூக்கிய திருவடியைக் கண்டு வணங்கவும் ஏழையின் உள்ளம் துடிக்கின்றதே. உம்மைச் சேவிக்கும் பேறு பெறாத என் பிறப்பு மிகவும் இழிந்தது. உன்னைக் காணாது அடியேன் எவ்வாறு வாழ்வேன் ?'' என்று துதித்துத் தொழுவார்; அழுவார். இவ்வாறு இரவுபகலாகத் தில்லைமாநகரை வலம் வந்து கொண்டிருந்தார்.

நந்தனாரின் எல்லையில்லாத வருத்தத்தைத் தீர்க்கும்பொருட்டுக் கனக சபாபதி ஒரு நாள் அவருடைய கனவில் தோன்றினார். ''அன்பனே நீ வருந்த வேண்டாம். இப்பிறவி போய் நீங்க எரியில் மூழ்கி அந்தணர்களுடன் நமது பொன்னம்பலத்துக்கு வருவாய்'' என்று அருள் புரிந்தார். நந்தனாரது கனவில் தோன்றியது போன்றே தில்லை மூவாயிரம் அந்தணர்களின் கனவிலும் பெருமான் தோன்றினார். ''நமது திருத்தொண்டன் நாளைப் போவான் வந்திருக்கிறான். அவனது உள்ளக் கருத்தின்படி வேள்வித் தீ மூட்டியமைத்துக் கொடுங்கள். அவன் அதில் மூழ்கி நம்பால் வருவான்'' என்று அருட்கட்டளையிட்டு அருளினார்.

மூவாயிரம் அந்தணர்களும் துண்ணென்று எழுந்து திருக்கோயில் சென்று தொழுது. ''தேவரீர் திருவுள்ளப்படி செய்வோம்'' என்று துதித்தனர். பின்னர் அவர்கள் திருநாளைப் போவார் இருக்குமிடம் வந்தார்கள். ''ஐயரே! அம்பலவாணரது திருவருளால் இப்



பொழுது நாங்கள் வந்தோம். உமக்கு வேள்வித் தீ வளர்த்துத் தருமாறு இறைவர் கட்டளையிட்டிருக்கிறார்'' என்றார்கள். நைந்த உள்ளமுடைய திருநாளைப் போவார், ''அடியேன் உய்ந்தேன்'' என்று தொழுதார். அந்தணர்கள் செந்தழல் வளர்த்தனர். அந்தி வண்ணரைச் சிந்தை செய்த வண்ணமாகச் செந்தழலை வலம் வந்தார் நந்தனார். கரங்களைச் சிரமிசை கூப்பிக் குஞ்சிதபாதத்தைச் சிந்தித்து நெருப்பில் புகுந்தார். உடனே அவருடைய மாயாகாரியமாகிய பொய்மை பொருந்திய உருவம் நீங்கியது. புண்ணிய முனிவர் உருவம் கொண்டு, முப்புரி நூலும், சடைமுடியும் விளங்க எழுந்தார்.

> கைதொழுது, நடமாடுங்
> கழலுன்னி அழல்புக்கார் ;
>
> எய்தியஅப் பொழுதின்கண்
> எரியின்கண் இம்மாயப்

பொய்தகையும் உருவொழித்துப்
புண்ணியமா முனிவடிவாய்
மெய்திகழ்வெண் ணூல்விளங்க
வேணிமுடி கொண்டெழுந்தார்.

ஜாதி யென்பது உயிருக்கு இல்லை; உடம்புக்கும் இல்லை. செய் தொழிலாலும் குணங்களாலும்தான் ஜாதி வேற்றுமை உண்டாகிறது. ஒருவனே பலப் பல ஜாதியை அடைகிருன். தணிந்த சிந்தையுள்ளபோது அந்தணனுகவும், பொறி புலன்களை வென்று அடக்கி யாளும்போது அரசனுகவும், புண்ணிய பாவ விருத்தியைச் செய்யும்போது வைசியனுகவும், பிறருக்கு உபகாரம் புரியும்போது வேளாளனுகவும், கோபம் வரும்போது சண்டாளனுகவும் மாறுகிருன்.

நந்தனுர் தணிந்த சிந்தையுடையவர். அந்தணர்களாலும் வணங்கத் தக்கவர். அப்படியாயின் இறைவர் ஏன் அவரைத் தீக்குளிக்க வைத்தார் என்ற கேள்வி எழும்.

நந்தனுர் தம் திருவுள்ளத்தில் தமது உடம்பு புலையுடம்பு என்றும், தாம் இழிபிறப்பினர் என்றும், தாம் திருக்கோயிலுக்குட் புகுவது நெறியன்று என்றும் கருதினுர். ''வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்'' என்றபடி இறைவர் அவரை நெருப்பில் மூழ்குமாறு செய்து, அவர் கருத்தின்படி முனிவர் வடிவை நல்கி அருள் புரிந்தார்.

நடராஜமூர்த்திக்குத் திருவடி வருந்துமே என்று கருதிய பாண்டியன் கால் மாறி ஆடுமாறு வேண்டினுன். வேத மந்திர வடிவினராகிய இறைவருக்குக் கால் வருந்துவது கிடையாது. பூத சரீரமானுல்தானே கால் வருந்தும்? ஆனுல் இறைவர் பாண்டியனுக்கு அதை உணர்த்தினுரில்லை. பாண்டியன் விருப்பத்தை நிறைவேற்றும் பொருட்டுக் கால் மாறி ஆடினுர்.

தன் பங்குக்குக் கரையை உயர்த்துவதற்கு ஆள் வேண்டும் என்று வருந்தினுள் வந்தியம்மை. இறைவர் கைலையில் இருந்த வண்ணமே வைகையாற்றின் கரையை உயர்த்தலாம். ஆனுல் அவ்வாறு செய்தாரில்லை; மண் சுமக்கும் ஆளாக வந்தார்.

''வாயானை மனத்தானை
மனத்துள் நின்ற
கருத்தானை கருத்தறிந்து
முடிப்பான் றன்னை''

என்பார் அப்பர் அடிகள். ஆகவே, திருநாளைப் போவாரின் கருத்தை முற்றுவிக்கக் கருதிய இறைவர், அவரைத் தீயில் மூழுக வைத்து, முப்புரி நூலும் சடை முடியும் தந்து அருள் புரிந்தார். நந்தனுர் தீயில் முழுகி எழுந்த காட்சி செந்தாமரை மலர் மீது தோன்றிய பிரம தேவரைப் போல் இருந்தது. வானிடை அந்தர துந்துபி முழங்கியது. சிந்தை மகிழ்ந்த இந்திராதி இமையவர் மந்தார மலர் மழை பொழிந்தனர். திருவுடைய தில்லைவாழ் அந்தணர்கள் கைகூப்பித் தொழுதனர். திருத் தொண்டர்கள் மகிழ்வுடன் பணிந்தனர். கனகசபையில்



ஆனந்தத் தாண்டவம் புரியும் திருவடியை வணங்கச் செல்லும் திருநாளைப் போவாருடன் அந்தணர்களும் அடியார்களும் சென்றனர். திருக்கோபுரத்தைத் தொழுது உட்புகுந்த திருநாளைப் போவார் மணி மன்றம் சென்ருர். அவ்வளவுதான்; அவ்ரை ஒருவரும் கண்டிலர். தூக்கிய திருவடியில் கலந்து விட்டார் நந்தனுர்.

அந்தணர்கள் அதிசயித்தார்;
அருமுனிவர் துதிசெய்தார்;
வந்தணைந்த திருத்தொண்டர்
தம்மைவினை மாசறுத்துச்
சுந்தரத்தா மரைபுரையுந்
துணையடிகள் தொழுதிருக்க
அந்தமிலா ஆனந்தப்
பெருங்கூத்தர் அருள்புரிந்தார்.

(தொடரும்)

4. 18 மாத சந்தா தொகை முழுவதும் செலுத்திய பிறகு அங்கத்தினருக்கு மேலும் ரூ. 35.00 மதிப்புள்ள புத்தகங்களையும், 3 பரிசு புத்தகங்களையும் டிரஸ்டார் அனுப்பி வைப்பார்கள். இவைகளைப் பெற அங்கத்தினர் முன் செய்ததுபோல் செய்யவேண்டும்.

5. 18 மாதங்களுக்கும் சந்தா செலுத்த முடியாமற்போன அங்கத்தினர்களுக்கு, அவர்கள் செலுத்திய தொகையளவு மதிப்புள்ள புத்தகங்கள் அனுப்பப்படும். இவ்வங்கத்தினர்கள் புத்தகங்களுக்கான பாக்கிங் மற்றும் தபால் செலவையும் ஏற்கவேண்டும்.

இத் திட்டத்தில் சேர்ந்து 18 மாதங்களும் சந்தா செலுத்தும் அங்கத்தினர் அடையும் லாபம் என்ன ?

| | | | |
|---|---|---|---|
| i) அங்கத்தினர் தேர்ந்தெடுக்கும் புத்தகங்களின் மொத்த மதிப்பு | ... | ரூ. | 90.00 |
| ii) 12 பரிசு புத்தகங்களின் மதிப்பு | ... | ரூ. | 20.00 |
| iii) இலவசமாகப் பெறும் புத்தகப் பட்டியலின் மதிப்பு | ... | ரூ. | 1.00 |
| iv) இலவசமாகப்பெறும் ''புத்தக நண்பன்'' 18 பிரதிகளின் மதிப்பு | ... | ரூ. | 9.00 |
| v) பாக்கிங், தபால் செலவு இலவசம் | ... | ரூ. | 10.00 |
| | | ரூ. | 130.00 |
| அங்கத்தினர் செலுத்தும்தொகை | | ரூ. | 90.00 |
| அங்கத்தினர் அடையும் லாபம் | | ரூ. | 40.00 |





காதல் வாழ்க


ஏழாவது நகரை


வளரும் விஞ்ஞான சிந்தனைகள்


காகிதச் சித்திரம்








அரசியல் கைதி　மிருகங்களுடன்　புதுத் தமிழ்க் கவி மலர்கள்　ரதோத்சவம்　நிலம் தரும் செல்வம்　தாயார் கொடுத்த தனம்

நூதன வங்கச் சிறுகதைகள், 3 மணி

கீழ்க்கண்ட கூபனை உடனே பூர்த்தி செய்து அனுப்பி அங்கத்தினர் ஆகுங்கள் :

## தென் மொழிப் புத்தக டிரஸ்ட்
### 25, ஸ்டார்லிங் ரோடு, சென்னை-34

ஐயா,

''வீட்டு நூலகம்'' அமைக்கும் உங்கள் திட்டத்தில், அதன் நிபந்தனைகளுக்குட்பட்டு, அங்கத்தினராக சேர விரும்புகிறேன். இதற்கான முதல்மாத சந்தாவான ரூ. 5.00 மணியார்டர் மூலம் அனுப்பியுள்ளேன். விளம்பரத்தில் காட்டியுள்ள பத்து பரிசு புத்தகங்களில் எனக்குப் பிடித்த மூன்று புத்தகங்களின் பெயர்களை கீழே கொடுத்துள்ளேன்.

1

2

3

பெயர் ..............................

ஊர் : ..............................　கையொப்பம் ..............................

தேதி : ..............................　முழு விலாசம் ..............................

..............................

*குறிப்பு : சந்தா தொகை எப்பொழுதும் மணியாடர் மூலம் தான் அனுப்பப்பட வேண்டும். சென்னையில் வசிக்கும் அங்கத்தினர் சந்தா தொகையை டிரஸ்டின் அலுவலகத்தில் நேரில் கட்டி ரசீது பெற்றுக் கொள்ளலாம்.
வரும் பொங்கல் தினத்துக்குள் அங்கத்தினராக சேருவோருக்கு அதிகப்படியாக ஒரு பரிசு புத்தகம் அளிக்கப்படும்.

நேற்று பத்திரிகையில் படித்திருப்பீர்கள்: எண்பது வயது வாழ்ந்துவிட்டு, சின்னையா என்ற சின்னசாமி, தென்னாட்டின் ஒரு மூலையில் கிருஷ்ணபுரம் என்னும் குக்கிராமத்துக்கருகே காலமானார் என்ற செய்தியைத்தான் சொல்கிறேன். அதைப் படித்துவிட்டு நீங்கள் என்ன நினைத்தீர்களோ தெரியாது. என்னை அந்தச் செய்தி அப்படியே குலுக்கிப் போட்டுவிட்டது. இந்தத் தள்ளாத வயதில் நான் வாய்விட்டு அழுதேன். அந்த அழுகை முழுதும் துக்கத்திலிருந்து வந்ததுதானா? என் அழுகையில் திகைப்புத்தான் மேலோங்கியிருந்தது என்று சொல்ல வேண்டும்.

நானும் சின்னையாவும் இளைஞர்களாக ஒன்று சேர்ந்து சுற்றிய காலமெல்லாம், அந்தச் செய்தியைப் படித்துவிட்டுச் செயலற்று உட்கார்ந்திருந்த என் நினைவுக்கு வந்தது. கணக்கில்லாத எத்தனையோ



நிகழ்ச்சிகளும், அனுபவங்களும் மனத்திரையில் நகர்ந்து செல்வதை உணர்ந்தேன். ஆனால் அவற்றையெல்லாம் இடித்துத் தள்ளிக்கொண்டு முன்னே வந்து நின்ற ஒரு சம்பவத்தை நினைத்தபோது எனக்கு உடம்பு முழுதும் புல்லரித்தது. நாங்கள் இருவரும் சேர்ந்து அனுபவித்த கடைசிச் சம்பவம் அதுதான்.

ஐயோ, இதோ எழுதுகிறேனே, இப்போதுகூட மனமெல்லாம் பதறுகிறது. கை நடுங்குகிறது...

முப்பது ஆண்டுகளுக்கு முன் நடந்தது. எனக்கும் சின்னையாவுக்கும் அப்போது ஐம்பது வயது இருக்கும். நாங்கள் சென்னைக் கம்பெனி ஒன்றில் வேலை பார்த்துக் கொண்டிருந்தோம். நான் சொல்லும் சம்பவம் நிகழ்ந்த அன்றுதான் சின்னையாவுக்குச் சென்னை ஆபீஸில் கடைசி நாள். வேலை உயர்வு கிடைத்து மாற்றலும் ஆகிவிட்டிருந்தது அவனுக்கு. மறுநாள் இரவே அவன் வடக்கே கல்கத்தாவிலிருந்த கம்பெனித் தலைமைக் காரியாலயத்துக்குப் புறப்பட்டுவிட வேண்டும்.

மாலையில் வேலை முடிந்து ஆபீஸை விட்டு வெளி வந்தோம். உடனே வீடு திரும்ப வேண்டுமென்று அவன் துடித்தான். மறுநாள் அவன் குடும்பத்துடன் புறப்படுவதாயிருந்ததால் இன்னும் எத்தனை எத்தனையோ ஏற்பாடுகளெல்லாம் பாக்கி நின்றதாம். ஆனால் நான் விடவில்லை. என்னுடன் அப்போதைக்குக் கடைசியாக ஒரு காப்பியாவது சாப்பிட வேண்டும் என்று வற்புறுத்தி அழைத்தேன். சின்னையாவுக்கு விருப்பமில்லை. "காப்பி அது இது என்று நேரமாக்கினால், பஸ்ஸில் நெரிசல் அதிகமாகிவிடும்" என்று சொல்லித் தட்டிக் கழிக்கப் பார்த்தான்.

ஆனால் நான் விடாமல் வற்புறுத்தினேன். "நானும் உன்னுடன் வந்து உன்னுடைய பிரயாணத்துக்கு உதவி செய்கிறேன், சரிதானே?" என்று நான் சொன்ன பிறகுதான் இணங்கினான்.

ஹோட்டலிலிருந்து நாங்கள் வெளியே வந்து பஸ் ஸ்டாண்டை அடைந்தபோது மணி ஆறு இருக்கும். அங்கே ஒரே கூட்டம். அந்த நாளிலெல்லாம் க்யூ ஏது? பஸ்ஸும் அடிக்கடி வராது. எப்போது எந்த பஸ் வரும் என்ற நிச்சயமும் கிடையாது. ஆகையால் எல்லோரும் எல்லா பஸ்ஸிலும் பாய்வதற்கு ஆயத்தமாக நின்றார்கள். சின்னையாவின் முகம் கருங்கியது. "இதற்குத்தான் அப்போதே சொன்னேன்....இந்தக் கூட்டத்தில் எப்போது வீட்டுக்குத் திரும்பி, எப்போது மூட்டை கட்டி..." என்று முணுமுணுத்தான். சின்னையாவிடம் இதுதான்

எனக்குப் பிடிக்காது. சின்னச் சின்ன விஷயங்களுக்கெல்லாம் மனத்தை அலட்டிக் கொண்டு தவிப்பான். அதே மனப்பான்மையோடு தானோ என்னவோ, அற்ப விஷயத்தையெல்லாம் மலையத்தனை பெரிதான கொள்கைப் பிரச்னையாக்கி அதற்காக வருஷக் கணக்காகப் போராடக்கூட அவன் தயங்க மாட்டான். அது ஒரு சுபாவம்.

அன்றுதான் என்ன பாடுபடுத்திவிட்டான்!

பஸ்ஸுக்காகக் காத்திருக்கும் கொடுமையோடு அவனுடைய முணுமுணுப்பையும் சமாளித்துக் கொண்டு நான் நிற்க வேண்டியிருந்தது. கூட்டம் வர வர அதிகமாகிக் கொண்டிருந்தது. இதிலெல்லாம் ஒரு விரக்தி நிலை வேண்டும். எனக்கு அது உண்டு. 'பஸ் வரத்தாமதமாகிறதா? ஆல்ரைட்! நிற்போம். பஸ் வந்து வீடு போய்ச் சேர்ந்த பிறகு, இங்கே நாம் காத்திருந்ததை நினைத்துச்

# மரணம் தோற்றது



பூர்ணம் விசுவநாதன்

சிரிப்போம்'' — இதுதான் என் தத்துவம். சின்னையா நொடித்தான். ''ஆமாம்! விதியின் கையில் நம்மை அப்படியே ஒப்படைத்து விட்டுச் சிரித்துக் கொண்டிருக்கலாம் என்கிறாய். கையாலாகாதவன் செய்கிற காரியம்.'

''கையாலாகிறவன்தானே நீ? அதோ பஸ் வந்து விட்டது. உன் சாமர்த்தியத்தைக் காட்டு. பார்க்கலாம்.'' நான் பரபரப்புடன் கூறினேன். சின்னையா திரும்பிப் பார்த்து விட்டுத் தானும் பரபரப்புடன் ஆயத்தமானான்.

பஸ் வந்து நின்றபோது...சொல்ல வெட்கமாயிருக்கிறது. கூட்டம் முழுதும் எங்கள் இருவருக்கும் பஸ்ஸுக்குமிடையில் எப்படிப் புகுந்து கொண்டு விட்டது என்பது எங்களுக்கே புரியவில்லை. எங்கள் வயதும் குறுக்கே நின்றதை உணர்ந்தோம். அடித்துப் புடைத்துக் கொண்டு, ஜனங்களைத் தாறுமாறாகத் தள்ளியவாறு முன்னேறப் பார்த்தோம். மற்றவர்களுக்கும் தெரியாதா இந்த வித்தை? நாங்கள் அரை அங்குலம் முன்னேறினால் அவர்களும் ஏற்கனவே அதே அரை அங்குலம் முன்னேறியிருக்கக் கண்டோம். அவர்களுடைய முன்னேற்றத்தை ஆதாரமாகக் கொண்டுதான் எங்கள் முன்னேற்றம் நடந்து கொண்டிருந்தது என்பது எங்களுக்குத் தெரிய வெகு நேரமாகவில்லை.

இருந்தாலும் பின்னுக்கும், முன்னுக்குமாய் நகர்ந்ததில் எவனெவன் எங்கெங்கே கோட்டை விட்டானோ, தெரியாது. நாங்கள் இருவரும் பஸ்ஸை அநேகமாக நெருங்கி விட்டோம். எங்களுக்கு முன்னால் இரண்டே பேர்தான். நாங்கள் நாலுபேரும் ஏறினால் 'ஓவர் லோட்' ஆகிவிடாது என்பதை அத்தனை நெருக்கடியிலும் கணக்கிட்டுத் தெரிந்து கொண்டோம். ஆனால் அந்தச் சமயம் பார்த்து, கண்டக்டர் குறுக்கே ஒரு கையையும் ஒரு காலையும் நீட்டி எங்கள் நால்வரையும் தடுத்து விட்டான்.

இந்த இடத்தில் போராட்டம் ஆரம்பமாயிற்று. ''இனிமேல் இடமில்லை'' என்று கண்டக்டர் சொன்னவுடன், நாங்கள், ''எங்கள் நால்வருக்கும் இடம் இருக்கிறது. ஏற்றிக் கொள்ளலாம்'' என்று வாதித்தோம். இதற்குள் முன்னாலிருந்த இருவரில் ஒருவர் புட்போர்டில் தொற்றிக் கொண்டு விட்டார். கண்டக்டர் எங்களைப் பார்த்தான். நாங்கள் பரிதாபமாக அவனைப்பார்த்தோம். 'இவர்கள் விடமாட்டார்கள் போலிருக்கிறதே' என்று அவன் டிரைவரிடம் கத்திச் சொன்னான். முன்னாலிருந்த இரண்டாவது ஆளும் இப்போது தொற்றிக்கொண்டுவிட்டார். நாங்கள் இருவரும் எப்படியாவது ஏறிக்கொண்டு விடத்தான் துடித்தோம். ஆனால் மேல் கம்பியைப் பிடித்தோமே ஒழியப் புட்போர்டில் கால் வைக்க இடமில்லை.

திடீரென்று கண்டக்டர் மற்ற இருவரை மட்டும் அணைத்தவாறு உள்ளே தள்ளிவிட்டு 'ரைட்' கொடுத்து விட்டான். இப்படி ஒரு சமரச ஏற்பாட்டுக்கே காத்திருந்தவன்போல் டிரைவர் விர்ரென்று புறப்பட்டுவிட்டான். நல்லவேளை! சரியான சமயத்தில் கம்பியை விட்டோம். இல்லாவிட்டால் தலை குப்புற விழுந்திருப்போம். ஐம்பது வயதில் அப்படியெல்லாம் விழுந்தால் வெறும் எலும்புக் கணக்குத்தான் மிஞ்சும்.

சின்னையாவின் கண்களில் அனல் பறந்தது. அத்தனை பேருக்கும் நடுவில் தனக்கு அவமானம் நேர்ந்து விட்டதாக மட்டும் அவன் வருத்தப்படவில்லை. எங்கள் இருவரையும் ஏற்

# அதிகப் பால்

நான் ஒரு அதிர்ஷ்டசாலியான பசு! எனது எஜமானர் நல்லவர். அவர் எனக்கு வைட்டமின் செறிந்த OK மாட்டுத்தீவனம் கொடுக்கிறார். அதற்குத்தான் என்ன ருசி! OK என் உடம்பு நன்றாக இருக்க உதவுகிறது. அதில் வைட்டமின்கள் A மற்றும் D நிறைந்திருக்கின்றன. புரதச்சத்துகளும், உலோகப் பொருள்களும் ஏராளமாக இருக்கின்றன. எஜமானரும் யோகக்காரர் என்றுதான் சொல்லவேண்டும். OK தீவனம் உடனடியாக உபயோகிக்கக்கூடிய விதத்தில் கிடைக்கிறது. அரைக்க வேண்டிய, கலக்க வேண்டிய தொல்லை எதுவும் இல்லை. இப்பொழுது நான் மிகவும் அதிகமாக பால் கொடுக்கிறேன். உன் எஜமானரிடம் உனக்கும் OK தீவனம் கொடுக்கச் சொல்லு. சிக்கனமானது. OK தீவனம் என்றால், அம்மா, அது எவ்வளவு ஆனந்தம்! உன் எஜமானரும் ஆனந்தமாக இருக்கச் செய்...அதிகப் பால், மிகவும் அதிகப் பால் கொடு.

**OK** வைட்டமின் செறிந்த
மாட்டுத் தீவனம்



தயாரிப்பாளர்கள்:
**தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா)
பிரைவேட் லிமிடெட், சென்னை-1**
*உங்கள் அருகாமையிலுள்ள டீலர் அல்லது டிஸ்ட்ரிபியூட்டரிடமிருந்து வாங்குங்கள்*






நிக்கொள்ளாமல் போனது நேர்மை விதிகளின்படி கடுங் குற்றம் என்றும், விஷயத்தை அதோடு விட்டுவிடக் கூடாது என்றும் கத்தினான். இதைப் போய் அவன் ஒரு கொள்கைப் பிரச்னையாக்கியது எனக்குத் திகைப்பை யளித்தது.

''இனிமேல் என்ன செய்வது? பஸ் இங்கே இருந்தால் நீ பேசு வதற்குப் பலன் உண்டு. அவனோ போய் விட்டான். அடுத்த பஸ்ஸிலாவது முதலில் இடம் பிடிப்போம்'' என்று நான் சொல்வதற்குள் சின்னையா சீறி விழுந்தான். ''பஸ்ஸில் இடம் இருந்தும் நம்மை விட்டுச் சென்றிருக்கிறான். இதைச் சாமான்ய விஷயமாக நான் விடமாட்டேன்'' என்று சத்தம் போட்டான். அவன் உடல் கோபத்தால் நடுங்கிக் கொண்டிருந்தது. நான் மேற்கொண்டு சொன்ன சமரச வார்த்தை எதற்கும் பயனில்லை.

திடீரென்று அவன் அந்த வழியே வந்த கார் ஒன்றைக் கை காட்டி நிறுத்தினான். டிரைவர் ஓட்டி வந்த கார் அது. சொந்தக் காரர் உள்ளே இல்லை. கார் நின்றவுடன், சின்னையா டிரைவரிடம், ''அவசரமாகச் செல்லவேண்டி யிருக்கிறது. நீ கேட்பதைக் கொடுத்து விடுகிறோம். சம்மதமா?'' என்று கேட்டான். நான் தடுப்பதற்குள் டிரைவர் சபலத்துடன் இணங்கிவிடவே, சின்னையா அவசரம் அவசரமாகப் பின் கதவைத் திறந்து என்னை உள்ளே தள்ளித் தானும் ஏறிக் கொண்டான்.

''சென்ட்ரல் வழியாக விடு. மயிலாப்பூர் பஸ் ரூட்டில்'' என்று கட்டளையிட்டு விட்டு அவன் என்னை வெற்றிப் பார்வை பார்த்த போது எனக்கு வேதனையாக இருந்தது. ''இது என்ன சின்னையா, வேண்டாத வம்பு?'' என்று தடுக்க முயன்றேன். ஆனால் அவன் வெகுண்டு, ''வேண்டாத வம்பா? இதை இரண்டிலொன்று தீர்த்துவிட வேண்டும்.... கொஞ்சம் வேகமாக விடப்பா!'' என்று டிரைவரை முடுக்கினான்.

தான் செல்லும் வேகத்துக்குத் தக்கபடி பணம் வாங்கிவிட முடியும் என்பதைப் புரிந்து கொண்டுவிட்ட டிரைவர், வேகத்தைத் தட்டிவிட்டான். மூன்றே நிமிஷங்களில் சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு வந்துவிட்டோம். அங்கே பஸ்ஸைக் காணவில்லை. சற்றே நிறுத்திச் சின்னையா அங்கே பஸ் ஸ்டாப்பில் நின்றவர்களிடம் மயிலாப்பூர் பஸ்ஸைப் பற்றிக் கேட்டான். அந்தப் பஸ் இரண்டு நிமிஷங்களுக்கு முன்புதான் சென்டிரலைக் கடந்து போயிற்று என்று பதில் வந்தது.

''பிடித்து விடலாம்.... உம், வேகமாக மவுண்ட்ரோடுக்கு விடப்பா!'' என்று சின்னையா மறுபடியும் டிரைவரை முடுக்கிய போது எனக்குக் கிலியாயிருந்தது. ''தானே ஊருக்குப் புறப்பட வேண்டியவன், இப்படி முரண்டு பிடிக்கிறாயே! இது நியாயமா?.... இந்தக் காரிலேயே நேராக வீட்டுக்குப் போய் விடலாம், வா'' என்று வற்புறுத்தினேன். சின்னையா கேட்டு விடுவானா? ''மூச்சு காட்டக் கூடாது. அந்தப் பஸ் டிரைவரிடமும், கண்டக்டரிடமும் மன்னிப்பு வாங்காமல் விட மாட்டேன். நாம் இருவரும் மவுண்ட்ரோடிலிருந்து அந்தப் பஸ்ஸில்தான் போகப் போகிறோம். பார்த்துக் கொண்டேயிரு'' என்று சவால் விட்டான்.

கார் பறந்தது. நாங்கள் கூவம் பாலத்தைத் தாண்டியவுடன், தூரத்தில் அந்தப் பஸ் ரவுண்ட்டானாவில் திரும்பிக் கொண்டிருந்தது தெரிந்தது. சின்னையா வெற்றிக் கூச்சல் போட்டான். ''டிரைவர்! அந்தப் பஸ்தான்...... அதைப் போஸ்டாபீஸில் பிடித்துவிட வேண்டும். வேகத்தைக் குறைத்து விடாதே!'' என்று உற்சாகமூட்டினான். நான் பயந்த சுபாவம் உள்ளவனாதலால், தலை மயிரெல்லாம் ஈர்க்குச்சி ஈர்க்குச்சியாய் நின்று மண்டையை உறுத்திக் கொண்டிருந்தது.

வாயு வேகத்தில் சென்று நாங்கள் ரவுண்ட்டானாவில் திரும்பி மவுண்ட் ரோட் போஸ்டாபீஸை நெருங்கிய போதுதான் பஸ் போஸ்டாபீசுக்கெதிரே சென்று நின்றது. அதற்குப் பத்து கஜம் பின்னால் காரை நிறுத்தினோம். சின்னையா ஒரு முழு ஐந்து ரூபாய் நோட்டை (அந்த நாளைய ஐந்து ரூபாய்; இப்போது அதன் மதிப்பு ஐம்பது ரூபாய்!) டிரைவர் கையில் திணித்து விட்டு, காரிலிருந்து பொத்தென்று குதித்தான்; நானும் ஈர்க்குச்சித் தலைமயிரோடு குதித்தேன். இதற்குள் பஸ்ஸில் ஏற வேண்டியவர்கள் ஏறிவிட்டார்கள். நாங்களிருவரும், ''ஹோல்ட் ஆன்! ஹோல்ட் ஆன்!'' என்று கத்திக் கொண்டு ஓடினோம். அந்த வயதில் என்னத்தை ஓடுவது? நாங்கள் பஸ்ஸிலிருந்து இரண்டே அடி இருந்த போது, கண்டக்டர், எங்களை ஒரு தரம் எட்டிப் பார்த்து, ''இடமில்லை'' என்று அலட்சியமாகச் சொல்லிவிட்டு, 'ரைட்' கொடுத்து விட்டான்.

கைக்கெட்டியது வாய்க்கெட்டவில்லை; அதாவது கண்ணுக்கெட்டியது கைக்கெட்டவில்லை. திரும்பிப் பார்த்தோம்; எங்களை இட்டு வந்த கார் இதற்குள் எங்கேயோ மறைந்து விட்டது; எங்கள் முயற்சி என்ன ஆகிறது என்று பார்த்து விட்டாவது போகக் கூடாதா? சின்னையா, அவமானத்

தால் குன்றிப் போய் நின்றான். மூச்சு இறைத்தது. நான் ஏதோ சொல்ல வாயெடுத்தேன்; ஆனால் எனக்கும் மூச்சு இறைத்தது. பேச முடியவில்லை.

சின்னையா சுற்று முற்றும் பார்த்தான். நான் பஸ் போன திசையைப் பார்த்தேன். பஸ் மவுண்ட்ரோடிலிருந்து திரும்பி மறைந்து விட்டது. திடீரென்று சின்னையா கையைக் காட்டி இன்னொரு காரை நிறுத்திவிட்டான். "ராயப்பேட்டை ஆஸ்பத்திரி வரைக்கும் அவசரமாகப் போக வேண்டும். ஏறிக் கொள்ளலாமா?" என்று கேட்டுக்கொண்டே ஏறியும்விட்டான். உள்ளே யிருந்தவர் கார் சொந்தக்காரர்தான். டிரைவர் இல்லை. எங்களிடம் பரிவு காட்டி ஏற்றிக்கொண்டார். எங்கள் அவசரத்தை உணர்ந்தவர் போல் அவரே வேகமாக ஓட்டினார்.

ராயப்பேட்டை ஆஸ்பத்திரியை நாங்கள் நெருங்கியபோது பஸ் அங்கே நின்று கொண்டிருந்தது. இதை எதிர்பார்த்து, முன்கூட்டியே கார்க்காரருக்கு ஏகப்பட்ட நன்றி கூறி முடித்து விட்டோம். பஸ்ஸைத் தாண்டிக் காரை நிறுத்தச் சொல்லி இறங்கிக் கொண்டு பஸ்ஸை நோக்கி ஓடி வந்தோம். ஆஸ்பத்திரி பஸ் ஸ்டாப்பில் இருந்த ஒன்றிரண்டு பேரும் இதற்குள் பஸ்ஸில் ஏறிக் கொண்டு விட்டார்கள். நாங்கள் வந்த கார் பஸ்ஸுக்கு நேர் எதிரே நின்றுவிட்டதால், பஸ் டிரைவர் சற்றே பின்னுக்குச் சென்று சரி செய்து கொண்டு புறப்பட ஆரம்பித்தான். அந்தச் சமயம் பார்த்து நாங்கள் இருவரும் பஸ்ஸில் பாய்ந்து ஏறிக்கொண்டு விட்டோம்! — ஆனால்...

முன்னால் இருந்த பிரயாணிகளுக்கு டிக்கட் கொடுத்துக் கொண்டிருந்த கண்டக்டர், நாங்கள் ஏறியதைப் பார்த்து, டிரைவரிடம் பஸ்ஸை நிறுத்தச் சொல்லிவிட்டு, எங்களை நோக்கி விரைந்து வந்தான். "சார், இறங்கி விடுங்கள். பஸ்ஸில் இடமில்லை" என்றானே பட்டென்று! மறுகணம் சின்னையா "முடியாது!" என்று ஒரே கத்தல் போட்டான். பஸ்ஸே அதிர்ந்து நின்று விட்டது. இப்போது எனக்கும் கோபம் பீறிட்டுக் கொண்டு வந்தது. நானும் சின்னையாவுமாகச் சேர்ந்து கொண்டு, கண் தலை தெரியாமல் கத்தித் தீர்த்தோம். நாங்கள் எப்படிப் பாரீஸ் கார்னரிலேயே ஏமாற்றப் பட்டோம், அப்புறம் என்ன செய்து பஸ்ஸை அங்கே வந்து பிடித்தோம் என்பதெல்லாம் அந்த பஸ்ஸில் நின்று கொண்டும், உட்கார்ந்து கொண்டும் இருந்த முப்பத்திரண்டு பொதுமக்களுக்கும் நன்றாய்த் தெரியட்டும் என்ற நோக்கத்துடன் படபடவென்று பொரிந்து தள்ளிவிட்டோம். இதற்குக் கண்டக்டர் ரத்தினச் சுருக்கமாகப் பதில் கொடுத்தான். "அதெல்லாம் எதற்குப் பேசுகிறீர்கள்? இப்போது வண்டியில் இடமில்லை. இறங்கிவிடுங்கள், வீண் சண்டை வேண்டாம்" என்று நிதானமாகப் பேசினான்.

"எந்தச் சண்டைக்கும் நாங்கள் தயார். இறங்க முடியாது" என்று சின்னையா கத்தினான். அதையே நானும் கத்தினேன் என்பது கடைசி இரண்டு வார்த்தைகளும் எதிரொலி போலச் சற்றுத் தாமதித்து என் வாயிலிருந்து வெளி வந்ததைக் கொண்டு, எனக்குத் தெரிந்தது.

டிரைவர் இறங்கி வந்து, அவனும் கண்டக்டருமாகச் சேர்ந்து எங்களை இறக்கி விட முயன்றது, முப்பத்திரண்டு பிரயாணிகளும் தாங்கள் விரைவில் வீடு திரும்பிவிட வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காக, அவர்கள் பக்கம் சாய்ந்தது, இத்தனையிலும் நாங்கள் விடாப் பிடியாக பஸ்ஸில் நின்றது இதையெல்லாம் பற்றிக் கதை கதையாகச் சொல்லலாம். ஆனால் இறுதியில் நடந்தது என்ன என்பதுதான் முக்கியம்.

நெடுநேரம் வாதாடிக் களைத்த பின்னர் டிரைவர், "சரி, சரி, வண்டியை வழியில் ராயப்பேட்டை போலீஸ் ஸ்டேஷனில் நிறுத்தி விடுகிறேன். இன்ஸ்பெக்டரிடம் நியாயம் கேட்போம்" என்று கூறினான். கண்டக்டரும் அதை ஆமோதித்தான். "ஓ! தாராளமாகப் போலீஸ் ஸ்டேஷனுக்கே அழைத்துச் செல். எங்களுக்குத் தடையில்லை" என்று நாங்கள் ஆர்ப்பரித்தோம்.

**ப**ஸ் எங்களுடன் புறப்பட்டது. நாங்கள் வெற்றிக் களிப்புடன் எல்லோரையும் ஒரு முறை பார்ப்பதற்குள் ராயப்பேட்டை போலீஸ் ஸ்டேஷன் வந்துவிடவே பஸ் நின்றது. டிரைவரும் கண்டக்டரும் இறங்கி உள்ளே சென்றார்கள். அந்த பஸ்ஸில்தான் பிரயாணம் செய்ய வேண்டும் என்று உறுதியாயிருந்த நாங்கள் இறங்காமல் பஸ்ஸிலேயே நின்றோம்.

சிறிது நேரத்துக்கெல்லாம் ஒரு ஸப்-இன்ஸ்பெக்டரோடு டிரைவரும், கண்டக்டரும் வந்தார்கள். எங்களை அவர்கள் இன்ஸ்பெக்டருக்குச் சுட்டிக் காட்டியவுடன் அவர் எங்கள் இருவரையும் இறங்கி ஸ்டேஷனுக்குள் வரச் சொன்னார். போனோம். உள்ளே வெகுநேரம் நாங்கள் வாதாடியும் பயனில்லை என்று இப்போது எழுதுவதற்கே எனக்கு வெட்கமாயிருக்கிறதே! அப்போது எவ்வளவு அவஸ்தைப்பட்டிருப்போம்! "பஸ் ஒரேயடியாய் 'ஓவர்லோட்' ஆகியிருக்கிறது. இதற்காக டிரைவர் கண்டக்டர் இருவர் மேலும் 'ஆக்ஷன்' எடுக்கப் போகிறேன். ஆனால் நீங்கள் இருவரும் இந்த பஸ்ஸில் போக முடியாது" என்று இன்ஸ்பெக்டர் கண்டிப்பாகச் சொல்லி விட்டார்.

சின்னையா உடல் பதற அவரிடம் மன்றாடினான். தான் மறு நாள் பிரயாணத்துக்கு ஆயத்தம் செய்ய வேண்டியிருந்தது என்பதைச் சொன்னதோடு, இது தனது கௌரவம் சம்பந்தப்பட்ட பெரிய கொள்கைப் பிரச்னை என்ற பல்லவியையும் ஆவேசத்துடன் பாடினான். ஆனால் இன்ஸ்பெக்டர் ஒரேயடியாகத் தலையை ஆட்டிவிட்டார். "உங்கள் அவசரத்துக்கு நான் ஏற்பாடு செய்கிறேன். எங்கள் போலீஸ் வண்டி ஒன்று மயிலாப்பூருக்குப் போலீஸ் ஆட்களை ஏற்றிச் சென்று கொண்டிருக்கிறது. உங்களை

அங்கே கொண்டு விட்டுவிடச் சொல்கிறேன்'' என்று பரிவுடன் சொல்லிவிட்டு, எங்களையும், மற்ற இருவரையும் அழைத்துக் கொண்டு வெளியே வந்தார்.

வெளியே பஸ்ஸில் பிரயாணிகள் பொறுமையின்றி முணுமுணுத்துக் கொண்டிருந்தார்கள். போலீஸ் வண்டி கிளம்பத் தயாராக அருகில் நின்று கொண்டிருந்தது; அதனுள் அரை டஜன் போலீஸ்காரர்கள் கையில் கனத்த துப்பாக்கிகளுடன் உட்கார்ந்திருந்தார்கள். இன்ஸ்பெக்டர் பஸ்ஸுக்குள் ஒரு தடவை எட்டிப் பார்த்து ஆட்களை எண்ணிவிட்டு, டிரைவர் — கண்டக்டரிடம், ''இதெல்லாம் என்னப்பா?'' என்று கடுமையாகக் கேட்டார். கூடவே, ''ராயப்பேட்டை ஆஸ்பத்திரியில் ஏறினது யார் யார்?'' என்று பஸ்ஸுக்குள் ஒரு கேள்வி போட்டார். ஓர் இளம் பெண்மணி கையில் தங்க விக்கிரகம் போன்ற குழந்தை ஒன்றுடன் ஏறினவள் முன்வந்து, ''நான்'' என்றாள். இன்னொரு முதியவர், ''நானும் தான்'' என்றார். உடனே இன்ஸ்பெக்டர் அவர்கள் இருவரையும் இறங்கச் சொன்னார். ''பஸ்ஸில் 'ஓவர்லோட்'; முப்பது பேருக்கு மேல் இருக்கக் கூடாது. இறங்குங்கள். நீங்கள் அடுத்த பஸ்ஸில்தான் போக வேண்டும்'' என்று அறிவித்துவிட்டு, என்னையும் சின்னையாவையும் போலீஸ் வண்டியில் ஏற்றி விட்டார். முதியவர் தளர்ச்சியுடன் அடுத்த பஸ் ஸ்டாப்பை நோக்கி நடக்க ஆரம்பித்தார். பெண் மட்டும் நின்றாள்.

பஸ் டிரைவரையும், கண்டக்டரையும் மறு நாள் காலையில் ஸ்டேஷனுக்கு வரச் சொல்லிவிட்டு, போலீஸ் வண்டிக்குப் புறப்பட உத்தரவு கொடுத்தார் இன்ஸ்பெக்டர். இந்தச் சமயத்தில், இறக்கிவிடப் பட்ட பெண் அவரிடம் வந்து கெஞ்ச ஆரம்பித்தாள், தான் அவசரமாக மயிலாப்பூர் செல்ல வேண்டியிருப்பதாய். அப்போது அந்தக் குழந்தை — அதன் அழகை என்ன சொல்வது! தன் வெற்றுடம்பு குலுங்க இடி இடியென்று சிரித்தது. பஸ்ஸிலிருந்து இறக்கி விடப்பட்டதற்காக இத்தனை மகிழ்ச்சியா? விந்தைதான்.... இன்ஸ்பெக்டர் அந்தப் பெண்ணையும் போலீஸ் வண்டியிலேயே ஏற்றி விட்டார்.

சின்னையா அவமானத்தால் முகம் சிவக்கத் தலை குனிந்து உட்கார்ந்திருந்தான். நான் தான் அவனுடைய சார்பிலும் இன்ஸ்பெக்டருக்கு நன்றி தெரிவித்தேன். போலீஸ் வண்டி முதலில் புறப்பட்டது. என் தலையில் சர்க் குச்சி மறைந்து மயிர் படிந்துவிட்டது. நெடுந்தூரம் சென்று எங்கள் வண்டி தெரு மூலையில் திரும்பியபோது, பஸ் புகையைக் கிளப்பியவாறு போலீஸ் ஸ்டேஷனிலிருந்து புறப்பட்டது தெரிந்தது. வழி நெடுக அந்தக் குழந்தை கலகல வென்று எவ்வளவு தெய்விகமாகச் சிரித்துக்கொண்டு வந்தது!....

மூட்டை கட்டுவதில் சின்னையாவுக்கு உதவி செய்துவிட்டு நான் வீடு திரும்பிய போது இரவு மணி இரண்டு. நெடுநேரம் தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்து விட்டுக் கடைசியில் உறங்கிப் போனேன்.



''நம்ம லேடீஸ் கிளப் வாசலில் காவலுக்குக் கூர்க்கா வைத்திருப்பதை நான் ஆட்சேபிக்கிறேன்!''

''சரி! கூர்க்காவுக்குப் பதில் ஒரு கூர்க்கியை வைக்கலாமா?''

படபடவென்று கதவு தட்டும் சத்தம் கேட்டு நான் விழித்துப் பார்த்தபோது வெய்யில் ஜன்னல் வழியாக அறைக்குள் அடித்துக் கொண்டிருந்தது. பாய்ந்து சென்று கதவைத் திறந்தேன். வெளியே சின்னையா பேயறைந்தது போல் வெளிறிப் போய் நின்று கொண் டிருந்தான். கையில் அன்றையப் பேப்பரைப் பிடித்துக் கொண்டிருந்தான்; அதுவும் சேர்ந்து ஆடிற்று. என்னைக் கண்டவுடன் சின்னையா 'ஆ'வென்று கத்தியவாறு ஓடி வந்து என்னை அணைத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதான்.

''என்ன சின்னையா? என்ன ஆயிற்று? வீட்டில் எல்லோரும் சௌக்கியம்தானே?'' என்று பீதியுடன் விசாரித்தேன். உடனே அவன் விம்மிக் கொண்டே, ''வீட்டில் எல்லாரும் சௌக்கியம்தான்.... ஆனால் இதைப் பார் '' என்று என்னிடம் பேப்பரை நீட்டினான்.

ஐயோ, இதென்ன கொடுமை! முதற் பக்கத்தில் எவ்வளவு பெரிய பயங்கரச் செய்தி ! முந்தின நாள் நானும் சின்னையாவும் விரட்டி வந்து, இரண்டு முயற்சிகளுக்கப் புறம் கிட்டத்தட்டப் பிடித்து, இறுதியில் பிடிக்க முடியாமலே போய்விட்ட அந்தப் பஸ், மயிலாப்பூருக்குச் சென்று கொண் டிருக்கவில்லை; மரணபுரிக்குச் சென்று கொண் டிருந்தது! ராயப்பேட்டை போலீஸ் நிலயத்தி லிருந்து கடும் வேகத்தில் புறப்பட்ட சிறிது நேரத்துக்கெல்லாமே அந்தப் பஸ் ஒரு திருப்பத்தில் டிரைவரின் கட்டுக்குள்ளிருந்து விடுபட்டு, வீட்டுச் சுவரொன்றில் மோதி, ஒரு பக்கத்துச் சக்கரங்களிலேயே சாய்ந்த வாறு நூறு கஜம் ஓடி, நடு வீதியில் தலை குப்புறக் கவிழ்ந்து, தீப்பிடித்துக் கொண்டதாம். சுற்றுப்புறத்தில் இருந்த மக்கள் திகைப்பை உதறிவிட்டு ஏதும் செய்வதற்குள், பிரயாணிகளின் ஓலத்துக்கு நடுவே பஸ் பொசுங்கி விட்டதாம். எல்லாம் பத்தே நிமி

ஷங்களில் நடந்துமுடிந்து ஓசை அடங்கிவிட்டதாம். பேப்பரில் புகைப்படம் கூடப் போட்டிருந்தார்கள். இப்படியும் ஒரு கோரமா!

அந்தப் பிரயாணிகள்! ஐயோ, அவ்வளவு பேரும் இளைஞர்கள். ராயப்பேட்டை போலீஸ் ஸ்டேஷனில் இறக்கி விடப்பட்ட அந்தப் பெரியவரும், நாங்கள் இருவரும் வயதானவர்கள். அந்த டிரைவரும், கண்டக்டரும்கூட முப்பது வயதுக்குக் குறைவானவர்கள்தாம். மரண நேரம் நெருங்கிவிட்ட இளைஞர்களாகவே பார்த்துப் பார்த்துப் பொறுக்கிக் கொண்டு அந்த பஸ், அந்தக் குறிப்பிட்ட திருப்பத்தை நோக்கியல்லவா விரைந்து கொண்டிருந்தது. அதில் சின்னையாவுக்கும் எனக்கும் இடமில்லை. அந்தப் பெரியவருக்கும் இடமில்லை. குழந்தையோடு இறக்கி விடப்பட்டாளே, அந்தப் பெண்மணிக்கும் இடமில்லை.

அந்தக் குழந்தை! ஆஹா, எத்தனை மோகனச் சிரிப்பு! மரணப் பிடியிலிருந்து விடுபட்டதற்காகத்தான் அது அப்படி ஆனந்த வெறியுடன் சிரித்ததா? அந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டர்தான் காலதேவனா?

நான் சின்னையாவை அணைத்துக்கொண்டு வாய் விட்டுக் கதறினேன். ''சின்னையா, நாம் விரட்டிக் கொண்டு சென்றது பஸ்ஸைப் பிடிக்க அல்ல; மரணத்தைப் பிடிக்க. ஆனால் மரணம் நம் பிடியில் அகப்படாமல், தப்பி விட்டது. நம்மை உதறிவிட்டு ஓடிவிட்டதால் வெற்றி அதற்குத்தான்; நாம் தோற்றுவிட்டோம்'' என்று அரற்றினேன். சின்னையா தேம்பித் தேம்பி அழுதான். அவன் யாருக்காகக் கண்ணீரைக் கொட்டினான் என்பதை எப்படிப் பிரித்துச் சொல்வது? அதில் ஆனந்தக் கண்ணீர் எவ்வளவு என்பதையும்தான் சொல்ல முடியுமா?

அன்றிரவு சின்னையாவும் குடும்பத்தாரும் கல்கத்தாவுக்குப் புறப்பட்டுச் செல்லும்வரை இந்தப் பயங்கர நிகழ்ச்சியைப் பற்றிப் பேசிப் பேசி நடுங்கிக் கொண்டிருந்தோம். வாழ்வுக்கும் மரணத்துக்கும் இடையேயுள்ள எல்லைக் கோடு வரை சென்றுவிட்ட கடைசி விநாடியில் கோட்டைத் தாண்டாமல் விலகி வந்து விட்டோம் என்பதை நினைக்க நினைக்க மயிர்க் கூச்செறிந்தது. அந்தக் கோடு ஒரு மெல்லிய இழைதான். அதற்கு அகலம் கிடையாது என்பதும், அந்தக் கோட்டின் இந்தப் பக்கம் நாம் இருக்கும் வரைதான் நம் ஆர்ப்பாட்டம் எல்லாம் என்பதும் எத்தனை அழுத்தமான உண்மைகள்!...

அன்று புறப்பட்டுப் போன சின்னையாவுடன் எனக்கு மறுபடியும் சந்திப்பே ஏற்படவில்லை. நெடுங்காலத்துக்குக் கடிதத் தொடர்பு இருந்தது என்னவோ உண்மைதான்; ஆனால் இருவரும் மறுபடியும் ஒரு தடவை கூட நேரில் சந்திக்க முடியாதபடியே போய்விட்டது! நான் எங்கேயோ அவன் எங்கேயோ என்றிருந்ததால் தற்செயலாகக் கூடச் சந்திப்பு ஏற்படவில்லை. எங்கள் பிரிவு முழுமையடைந்தது போலாகி விட்டது. காலம் மட்டும் ஓடிக்கொண்டிருந்தது. முதுமை என்னை வாட்டும் போதெல்லாம் சின்னையாவை நினைத்துக் கொள்வேன், 'அவன் எப்படியிருக்கிறானோ' என்று. இனிமேல் அதுவும் முடியாது. அவன்தான் போய்விட்டானே!

நேற்றுப் பத்திரிகையில் வந்த செய்தியை முழுவதும் படித்தீர்களா? முப்பது வருஷங்களுக்கு முந்தைய அந்த நிகழ்ச்சிக்கும், பேப்பரில் போட்டிருக்கும் இந்தச் செய்திக்கும் எவ்வளவு ஒற்றுமை! நிருபர் இந்த நாளையப் பாணியில் செய்தியை விவரமாகக் கொடுத்திருக்கிறார்.

''....பக்கத்துக் கிராமத்திலிருந்து நடந்து வந்து கொண்டிருந்த திரு சின்னையாவுக்கு அந்த வழியாகச் சென்ற வெளியூர் பஸ்ஸில் பிரயாணம் செய்ய வேண்டும் என்று ஏன் தோன்றிற்றோ தெரியவில்லை. மித மிஞ்சிய களைப்பே காரணமாய் இருக்கலாம். பஸ்ஸை நிறுத்தச் சைகை காட்டினார். டிரைவர் பஸ்ஸை நிறுத்தி, 'இடமில்லை, பெரியவரே! அடுத்த பஸ்ஸில் வாருங்கள்' என்று சொல்லிச் சென்றுவிட்டார். திரு சின்னையா தொடர்ந்து நடந்து அரை மைல் சென்றபோது, அந்தப் பஸ் அவருக்காகவே காத்திருப்பது போல் ஒரு மரத்தடியில் நின்று கொண்டிருந்தது. திடீரென்று டயர் வெடித்து விட்டதால் புதிய டயர் பொருத்திக் கொண்டிருந்தார்கள். திரு சின்னையா வியப்புடன் பஸ்ஸை நெருங்கியதும், டிரைவர் வியப்புடன் 'பெரியவரே, இப்போது நீங்கள் வரலாம். ஒரு ஆள் பொறுமை இழந்து இறங்கிப் போய்விட்டார். நீங்கள் அவருடைய இடத்தில் ஏறி உட்கார்ந்து கொள்ளுங்கள்' என்று வரவேற்றார். சற்று நேரத்தில் பஸ் கடைசி ஸீட்டின் வலது ஓரத்தில் திரு சின்னையாவைச் சுமந்து கொண்டு புறப்பட்டது.

''கிருஷ்ணபுரத்தை நெருங்கிக் கொண்டிருந்த சமயத்தில், பஸ் திடீரென்று டிரைவரின் பிடியிலிருந்து நழுவி வலது பக்கத்து நடை பாதையில் ஏறிவிட்டது. டிரைவர் ஸ்டியரிங்கை இழுத்துப் பிடித்து பஸ்ஸை ஓர் ஒடி ஒடித்து மறுபடியும் சாலைக்குக் கொண்டு வருவதற்குள் பஸ்ஸின் வலது பாகத்தின் பின் பகுதி ஒரு மரத்தடியில் மோதி விட்டது. பஸ்ஸை நிறுத்திப் பார்த்த போது, திரு சின்னையா தமது ஸீட்டில் உயிர் நீங்கிச் சாய்ந்திருந்தார். வேறு யாருக்கும் ஒரு சிறு காயம் கூட இல்லை. பஸ்ஸின் வலது பின் பகுதிக்கு மட்டும் கொஞ்சம் சேதம்.''

என்றைக்கோ ஒரு நாள் சென்னையில், ''உனக்காயிற்று, எனக்காயிற்று'' என்று வீராப்புடன் ஒரு பஸ் மூலம் மரணத்தை எட்டிப் பிடிக்க முயன்று தோல்வியடைந்த சின்னையா, மேலும் முப்பதாண்டுகள் மரணத்தை நினைக்காமலே வாழ்ந்து விட்டு, அந்த முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு திடீரென்று முந்தா நாள், தமிழ்நாட்டின் வேறு ஏதோ மூலையில் ஒரு சாலையில் மறுபடியும் ஒரு பஸ்ஸிலேயே மரணத்தை அடையாளம் கண்டு கொண்டு முதல் முயற்சியில் அதைப் பிடிக்க முடியாமல் போய் இரண்டாவது முயற்சியில் பிடித்தே விட்டான். இந்தத் தடவை தோல்வி மரணத்துக்குத்தான்!

# வாழ்க்கையை இனிமையாக்குவது காட்பரிஸ்!



இனிப்பிலே இன்பம். பகிர்ந்துகொண்டு நீங்கள் மகிழ விரும்பும் நல்லின்பம். அதுதான் காட்பரிஸ் மில்க் சாக்கலேட்டு தரும் பேரின்பம். ஆம். காட்பரிஸ் சுவையென்ருல் குணச் சிறப்பின் சுவை, தர மேன்மையின் சுவை, பரிசுத்தமே உருவான பாலின் தூய்மைச் சுவை. இக் கணமே மென்று பாருங்கள் ஒரு சாக்கலேட்டு... இனிமை, இனிமை, எல்லாம் இனிமை!

ஒவ்வொரு சாக்கலேட்டும்-
பாலின் குணங்கள்
அடங்கியுள்ளது!



# வட்ட மேஜை

- குர்ரான் ஒப்பிக்க...
- கன்றினுல் நஷ்டம்!
- பழமொழி தொகுப்பு
- வட்டமேஜைக்கு வாழ்த்து
- அரிசி, பால் பஞ்சம்

பல்கலைப் பக்கங்களில் 'உங்களுக்குத் தெரியுமா?' என்ற பகுதியில் குர்ஆனை ஒப்புவிக்க மூன்று நாட்கள் ஆகும் என நண்பர் தகவல் கொடுத்துள்ளார். திறமை யான ஒருவர் பன்னிரண்டு மணி நேரத்துக் குள்ளாகவே ஒப்புவிக்க முடியும்.

திருச்சி
15–10–66 எஸ். காதர்சா

குரான் முழுவதையும் ஏழரை மணி நேரத்தில் பாராமல் ஒப்புவித்துவிடலாம்.

காயல்பட்டினம்
19–10–66 எம்.எல்.எஸ்.எம் புகாரி

பசுவைச் செயற்கை முறையில் கருத் தரிக்கச் செய்து கன்று ஈனுவதற்கு வழி செய்கிறார்கள். இப்படிப் பிறக்கும் கன்று களில் பல குருடாக இருக்கின்றன. சில கால் நடக்க முடியாமலும், தலை சரியானபடி நிற்காமல் ஆடிக் கொண்டும் இருக்கின்றன. இவற்றை ரட்சிக்க அரசாங்கம் பெண் கன்றாக இருந்தால் பத்து ரூபாய் கொடுக்கிறது. மற்ற ஆண் கன்றுகளின் கதி என்ன? பத்து ரூபாய் கொடுத்து விட்டால் மாத்திரம் இந்தக் கன்று களைக் காப்பாற்றிவிட முடியுமா? 'சும்மா இருந்த சங்கை ஊதிக் கெடுத்தானும் ஆண்டி' என்ற கதையாக, இந்த அரசாங்கம் இந்த வாயில்லா ஜீவன்களை இப்படி அங்கஹீனப் படுத்திக் கொடுமைப்படுத்துவதைத் தடுக்க வேண்டும். ஜாதிப் பசுக்களைக்கூடக் குருட்டுக் கன்றுகள் காரணமாய் மிகவும் குறைந்த விலைக்கு விற்கும்படி ஆகிறது. இந்த நஷ் டத்தை யார் ஈடு செய்வது?

சின்னக் காஞ்சி
17–10–66 வி.கே. கௌசல்யா

தமிழிலுள்ள பழமொழிகள் எல்லாவற் றையும் ஒன்று திரட்டி அவற்றை ஆங்கிலத் தில் மொழிபெயர்க்க நான் திட்டமிட்டிருக் கிறேன். என் திட்டம் நிறைவேறி வெற்றி பெற 'கல்கி' வாசகர்களின் உதவியையும் ஒத்துழைப்பையும் விரும்பி வரவேற்கிறேன். இத்துறையில் எனக்குத் துணை புரிய விரும்பும் அன்பர்கள் ஏதேனும் ஒரு தலைப்பிலுள்ள பழமொழிகள் எல்லாவற்றையும் அகர வரிசையில் திரட்டி அனுப்ப வேண்டும். எடுத் துக்காட்டாக, சிங்கத்தைப் பற்றிய பழ மொழிகளை அனுப்ப விரும்பினுல் 'சிங்கம்' என்னும் சொல் எந்தெந்த பழமொழிகளில் வருகின்றதோ அவை எல்லாவற்றையும் அகர வரிசையில் தொகுத்து அனுப்புதல் வேண்டும். அதைப் போலவே தனித் தனித் தலைப்புக் களில் பழமொழிகள் அனுப்பலாம். நீங்கள் அனுப்பும் பழமொழிகள் யாவும் மகிழ்ச்சி கலந்த நன்றியுடன் பெற்றுக் கொள்ளப்படும்.

கோலார், மைசூர் வ. பெருமாள்
18–10–66 தமிழ்ப் பேராசிரியர்
முதல் நிலைக் கல்லூரி, உரிகம்

வலிமுத விருப்போர் வலியோ ரெனவும்
வரிக்கடை விருப்போர் வலியிலார் எனவும்
ஏற்றத் தாழ்வாய் எண்ணும் வகையை
மாற்றிட எண்ணியோ மறுவில் "வட்ட
மேசை" அமைத்தே மெலியோர் வலியோர்
ஆசை நிரப்ப அழைத்தது கல்கி?
எழுத்தில் வலியோர் எளியோர் என்ற
இழுக்கினை மாற்றிட எண்ணிய நீயும்
"வட்ட மேசை" வகையாய் அமைத்து
ஓட்டம் நிறைந்த உயர்எழுத் தாளர்
எழுத்தில் இிணைநர், எல்லாம் சமமாய்
விழுப்பம் பெறவே செய்தாய் கல்கி!
உன்னுல் எம்போல் உருவில் சிறிய
சொல்லேர்க் கலைஞர் சோர்வும் நீங்குமே!

திருச்சி
7–10–66 "பூம்பொழில் முருகண்ணு"

தமிழ் நாட்டில் விளைச்சல் நன்கு இருந் தும் பஞ்சம், பற்றுக்குறைப் போர்வைகளால் கண்ட்ரோல் கரடி 'அகவிலே' அட்டகாசம் செய்து வருவதைச் சர்க்கார் உணர்ந்திருக் கும். இங்கு கொள்முதல் செய்யப்படும் நெல் ஸ்தல மக்களின் பட்டினிச் சாபத்தோடு ஏற்றுமதி செய்யப்படுகிறது. எங்களையும் கூடவே எங்காவது அனுப்பினுல் போய்விடத் தயாரா யிருக்கிறேம். பட்டணம் படி அரிசி இரண்டு ரூபாய் கொடுத்துக் கள்ள மார்க் கெட்காரர்களுக்குப் பலியாகச் சகியோம்.

வளவனூர் என். சஞ்சீவி

சென்னையில் பால் பற்றுக்குறை காரண மாய்த் தஞ்சை, தென்னுர்க்காடு மாவட்டம் முதலியவற்றிலுள்ள உற்பத்தித் திறன் முழுவதையும் மடக்கிச் சென்னைக்கே கொண்டு போய் விடுவதுதான் இப்போது தெற்கே தஞ்சை, சீர்காழி போன்ற இடங்களில் பால் பஞ்சத்தின் மூலகாரணம் என்பது தெளிவாகிறது. 'பிரைமரி பால்' சங்கங்களில் பற்றுக்குறை உள்ளவைகளில்கூட, உற்பத்தி யாகும் பாலில் ஒரு பகுதியைக் கட்டாயமாகச் சேகரித்துச் சென்னைக்குக் கொண்டு செல்வது எந்த நியாயத்தைச் சேர்ந்தது? இதுவரையில் கூட்டுறவு முறையில் கிராமப்புறங்களில் உற் பத்தி செய்யப்பட்ட பால் அந்தக் கிராமத் துக்கும் சுற்றியுள்ள நகர்ப்புறங்களுக்கும் வழங் கப்பட்டு வந்தது. ஆனல் தற்போது அதற்கும் ஒரு சாவு மணி அடித்து விட்டார்கள்.

சீர்காழி எஸ். வி. ஐயர்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.


உங்களுடைய கேசம் ஆரோக்யமாகவும்
பளபளப்புடனும் விளங்கும்
பிரில்க்ரீம்
தடவி நேர்த்தியாக தலையை வாரிக்கொண்டால்!
BRYLCREEM
THE PERFECT HAIRDRESSING
பிரில்க்ரீம் மட்டுமே
• அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாராளமாக உரோமம் கலையாமலும் நேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
• மிகவும் சிக்கனமானது—ஒருமுறை தடவி வாரிக்கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
• உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக்கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, நேர்த்தியான கலவை வாய்ந்தது.
• உங்களுடைய கேசத்தின் இயற்கையான வண்ணத்தைப் பாதுகாக்கிறது.
எனவே இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!
உலக முழுவதிலும் லக்ஷக்கணக்கான நேர்த்தியான மனிதர்கள் இதையே உபயோகிக்கிறார்கள்
B/P/T/P/1/65 TM

